# PEN KALVI,

# PEN MANUM

AND

OR

A GARLAND OF ADVICE TO FEMALES

AND

ESSAYS ON THEIR EDUCATION

AND

SOCIAL STATUS

BY

S VEDANAYAGAM PILLAY

*District Munsiff of Mayaveram, Author of Nedinvl,*

SIDDAHANTA SANGRAHAM &c



*MADRAS*

Printed at the Thondaimandalam Press

CHOOLAY

1901

Price, 6 Annas ෆிலை, அணா கூ.

உ

கடவுள் துணை

# பெண்மதிமாலை

## பெண்கல்வி

# பெண்மானம்

இவை, 24458

நீதிநூல், சித்தாந்தசங்கிரகம் முதலிய

கிரந்த கர்த்தராகிய

மாயூரந்தாலுகா முன்சீப்

ச. வேதநாயகம்பிள்ளை அவர்களால்,

இயற்றப்பட்டு

வேப்பேரி,

ப. முநுசாமிநாயுடு அவர்களால்,

சென்னை சூளை,

தொண்டைமண்டலம் பிரஸ்ஸில்

பதிப்பிக்கப்பட்டது.

1901

# CRITICAL NOTICES

## (From the Jaffana Freeman)

---

We have been favoured with a copy of a Tamil work entitled "Penmadi Malai and Pen Kalvi, or a Garland of Advice to Females and an Essay on Female Education" by Mr. S ... Pillay, District Munsiff (Judge) of Mayaveram ... District It consists of two parts, the first being advice to females written in Tamil metre, and containing 170 distichs which when chanted, fall most harmoniously on the ear This part is also supplemented by four lyrics, "On the characteristics of a good wife as compared with a bad one, and on the necessity of educating Females, and the manifold advantages arising from their education"

Indeed, we have seldom met with a Tamil poet of the present day who is never in want of words to express his thoughts suitably to the occasion, and to the character of the poem he writes But our author seems to be an exception Words are always in readiness to serve him in any manner he chooses, and he has such a wonderful command over them that neither rhyme or alliteration, nor sense suffers for want of suitable words Unlike the ordinary Tamil Poets of the present day, his thoughts are not governed by his words but his words are under the full control of his thoughts He gives his advice to females in a manner that his likely to make a very strong impression in their minds Most of the important subjects that ought to attract the attention of the young female are concisely treated in this part, which is written in a style that is both simple and attractive The author does not travel into the regions of History or phi

sophy in search of illustraions, but the ordinary and most impressive provebs which are on the lips of every body answer his purpose, and that most admirably He is now grave now gay, and now pathetic, but is impressive and pithy throughout Every word of his seems as if it has been weighed, and every line, as if it had been duly poised But with siepil this the versification does not at all seen to be laboured

The lyrics found in this part are capital pieces of composition The anthor's sentiments are conceived with great vigour and propriety, and his versification is not in the least laboured, but peculiarly smooth and melodious If one who is acquainted with the character of Tamil Lyric poetry were to sing Mr Vedanyangam Pillai's four lyrics to the proper tunes he would find something peculiarly charming and attractive in them There is nothing in the versifecation that is abrupt or obscure, the flow and melody of the lines are highly attractive, the tone that the author assumes is uncommonly agreeable, he is at once sublime, serious, gay, tender, and witty, his style is elegant and well finished, his expressions are pure, picturesque, ardent and withal simple and correct, the poerty is graced and adorned throughout by the judicious introduction of metaphors and other figures that serve to please the immagination, and add interest to the composition Our opinion is that, as a writter of lyric poetry, Mr Vedanayagam Pillai stands very high, and that it is not an easy thing to name a Tamil poet of the present day that can rival him We think he is only second to the celebrated writer of the lyrics on the Ramayanam

The second part which contains an Essay on Female Education has excellencies peculiar to itself The author says in the preface, that he has endeavoured to adapt it 'to the taste of Hindus in genaral without distinction of class or creed," and this we find to be borne out by almost every page of Essay In thi

Essay, the author's knowledge of the subject he writes upon and his great acquaintance with native society and manners, are clearly seen. Its style, again, is admirably suited to the class of readess for whom the work is intended, and the sentiments embodied therein are ably coneived and well digested His sentences are not encumbered by superfluous words, and they are of a moderate length, his cadence is varied and his figures are correct and glowing He writers with some degree of ardour and like one who has devoted much thought to the subject he treats of His observations regarding the pernicious custom prevalent in India (and we should say in Ceylon too) which dooms females to a life of modified from of slavery, are indeed excellent He depicts the inner life of Hindu Females most accurately, and points out most cleverly the evil effects arising from the state of degradation to wich they are now subject We must confess that, although we have seen a number of works in Tamil prose we have not met with such an excellent prose composition as the one we now review As a rule, Tamil prose writers are terse and dry But indeed Mr Vedanayagam Pillai is an exception, for, while he informs the understanding, he fails not to please the imagination and the ear

We learn that he is the author of a number of excellent lyrics now sung by many in Tranquebar and Tanjore Districts and that they have not as yet been printed After we have seen such excellent specimens of Mr. Vedanayagam Pillai's lyric poetry, we cannot but be anxious to see in print all the lyrics composed by him, and we would therefore urge on him the desirability of getting them printed

---

உ

கடவுள துணை

# பெணமதிமாலை

---

காபபு

விணமதி மாலை விலககலபோன மெயதோனறப
பெணமதி மாலையான பேசவே - தணமதிசூழ
அணடபகிரணடமுமமகணடமுமேயுணடெனமெய
கணடவரி ரணடுகழல காபபு

---

இராகம-நாதநாமககிரியை, மிசுரதாளம

கணணிகள

௧ மதியிது, மதியிது, பெணணே-புணணிய
வதியலல வோாலல மகராசி, கணணே (மதி

## தெயவபகதி.

௨ நிததியங கடவுளை வாழததுப-பய
பததியுடனேநீ பணிநதுனனைததாழததுு (மதி

௩ தூயதே வாலயம நாடு-பிளளை
தாயைத தேடுவதுபோற சாமியைததேடு (மதி

௪ காததாவை மறககுதல தாழவு-நாளை
செததால தெரியுமே செடடியாாவாழவு (மதி)

௫ எணண வொணணுவுப காமம-செயத
புணணிய மூாததிககு புரிநமஸகாரம (மதி)

௬ உலகெலலாம படடமாண டாலும-தெயவ
பலமிலலாககிலலையே பாககியமெககாலும (மதி)

௭ தலைமேலேமலைவிழுந தாலும தெயவ
பலமுடையாாககுணடோ பயமொருககாலும (மதி)

௮ உடலுயிா பலபல வுடைமை - எலலாம
இடமுடனீநதோனைச சேவிததலகடமை (மதி)

௯ பரவச மாகவுள ளுருகு, ஐயனை
திருவருளினைநது நீதினமா கணணீாபெருகு (மதி)

௰ சூதான மாயப பிரபஞசம-இதி
நாத னலலாது நமககுணடோ சிநேகம (மதி)

கக முன்னம் பொருளெல்லாந் — தந்து-பின்பு
தன்னையுந் தந்தவன் — தாள்தொழ முந்து (மதி)

கஉ மாதா, பிதா, குரு — தெய்வம்-ஆண்
நாதனா கைவிடில் — நாமென்னசெய்வம் (மதி)

கங துக்க சாகரஞ் — சமுசாரம்-கரை
பக்கமே திட்டப்பான — பாதமா தாரம் (மதி)

கச நீரை விட்டநூறகெடும் — மீனே-ஈச
னுரைவிட்டாலநமக — காதுணே?மானே (மதி)

கரு நாஞ்செய்வ தல்லாம் — விகாரம்-காததா
தாஞ்செய்வ தெல்லாந் — தகும்பகாரம் (மதி)

கசு தேவனை நினையாத — வுள்ளம் பெரும்
பாவமும் பழிகளும் — படுந்திடும் பள்ளம் (மதி)

கஎ ஈசனைப் போற்றாத — வாயே-ஒரு
காசுக் குதவாக — கசப்பெட்டிக்காயே (மதி)

கஅ- சத்திய மார்க்கத்தைக் — கூடு-தெய்வ
பத்தியே பாக்கியம் — பந்தயம்போடு (மதி)

ககூ ஜெபமின்றி — நீபடுக்காதே-நாளும்
ஜெபமின்றி யொருவேலை — நீதொடுக்காதே

{ மதியிது, மதியிது, பெண்ணே - புண்ணிய
வதியல்ல வோநல்ல மகராசி? கண்ணே }

---o---

## குருவணக்கம்

உ0, குருமாரை வணங்கிக்கொண் — டாடு - அவா
திருவாக்குக்கெதிராவாக் — கில்லாமலோடு (மதி)

உக, நித்தமும் குருவினக் — டாக்ஷம்-பெற்ற
சுத்தருக் கல்லவோ — சூடசதினமோக்ஷம் (மதி)

உஉ, ஞான குருவுப — தேசம்-இல்லா
ஈனருக் கில்லையே — யென்றும் பிரகாசம் (மதி)

உங, பூலோக வாழ்வெல்லாம் — நீங்கி-வந்த
மேலோரைக் கைதொழ — வேணும்ம நான பாங்கி (மதி)

உச அற்பருக் கூழியா — நாமே-ஆதி
கற்பா ஞாழியா — சாமிகள்தாமே

மதியிது, மதியிது, பெண்ணே - புண்ணிய
வதியல்ல வோநல்ல மகராசி? கண்ணே

## மாதா, பிதா, வணககம

௨௫ மாதா, பிதாவை — வணஙகு-காளும
ஆதாரமாகவே — யவாசொலலுககிணஙகு (மதி)

௨௬ தநதை, தாய சாபம — பொலலாது-அவா
சிநதை கொநதால மககள — செலவம நிலலாது (மதி)

௨௭ மாதாபிதாவுககுத — துரோகம-செயயும
பாதகனைச சுறறும — பாவமநேகம (மதி)

௨௮ பெறறவா நேசததைத — தேடு அவா
குறறததைத நீககிக — குணததைககொணடாடு (மதி)

௨௯ தாயதநதைக குதவாத — பிளளை-தன
தாயுசும வாழவு — மடியோடே கொளளை (மதி)

௩௦ கடடியுனை வளாகக — நாமே-மூனபு
படடபாடுகள சொலலப — பாரதமாமே (மதி)

௩௧ உளளதாய தநதைககுத — தீஙகு-செயயும
பிளளையைத தனபிளளை — யேபழிவாஙகும (மதி)

௩௨ கடலைபபோலமாதா — சகாயம-அதற
குடல செருபபாத தைததுப — போடுதலஞாயம,
மதியிது, மதியிது, பெணணே - புணணிய
வதியலல வோநலல மகராசிக கணணே,

## புததி

௩௩ அடுககுபபானையை — யுருடடாதே-வெகு
துடுககாகப பலகாரங — களைக சுருடடாதே (மதி)

௩௪ தஙகையைத தொடையிறகிள — ளாதே-தமபி
பஙகுபபணியாரததைப — பறிததுககொளளாதே (மதி)

௩௫ உனனைபபோறபிறரையும — நேசி - தினம
பொனனே, ஞானபுஸ — தகஙகளைவாசி (மதி)

௩௬ கறறவளே — துரைசாணி - கலலா
மறறவளே சுதத — மடையசசாமபிராணி (மதி)

௩௭ தாழவோரை நீ — சிரியாதே-மிக
வாழவோரைக கணடு நீ — வயிறெரியாதே (மதி)

௩௮ நாடடி லெலவரையும — வையாதே - உன தன
பாடடிசொனனாலு நீ — பாவஞசெயயாதே (மதி)

௩௯ பூசசியைப பிடிததுக — கொலலாதே-உன தன
ஆசசிசொனனாலுநீ — யபததஞசொலலாதே (மதி)

| | | |
|---|---|---|
| ௪0 | பிடசைபிடாம | லுணணாதே - மிருகம |
| | பட்சிகருமேதுனபம | பணண வொணணாதே (மதி) |
| ௪௧ | இஷடமாய கலலோரைக | கூடு - பொலலாத |
| | துஷடரைக கணடால நீ | தூரததிலோடு (மதி) |
| ௪௨ | ஊரார பொருளைத | தொடாதே - நாலு |
| | பேரறியும படி | பிட்சைபிடாதே (மதி) |
| ௪௩ | நிததமும நீரிலே | முழுகு - வீடு |
| | சுததமாகுமபடி | தோகையே மெழுகு (மதி) |
| ௪௪ | புழுநிறை யூதனைதச | சரீரம - இதைக |
| | கழுவாவிட்டால நாறும | காதவிலதாரம (மதி) |
| ௪௫ | அழுககுவஸதிரஙகள | கடடாதே - உடல |
| | கொழுககவுணணுமதீனி | குடலிலொடடாதே (மதி) |
| ௪௬ | சூதும வாதும | படியாதே - நாளும |
| | தீதுசெய தாலதரித | திரமவிடியாதே (மதி) |
| ௪௭ | கோட்சொலலிக குடி | கெடுககாதே - தபபுச |
| | சாடசி சொலலு நகுடி | தலையெடுககாதே (மதி) |
| ௪௮ | கோளும புரணியும | கேளாதே - எநத |
| | நாளும புறணிபேச | நாககுநீளாதே (மதி) |
| ௪௯ | வநததுன பததி | லாழாதே - மிகச |
| | சநதோஷமவநதாலுந | தலைகீழவிழாதே (மதி) |
| ௫0 | வேலைககு நீ | சிணுககாதே - ஒரு |
| | மூலைககுட புகுநது நீ | முணு முணுககாதே (மதி) |
| ௫௧ | வேலைசெயவோரை | வாடடாதே - தினம |
| | ஆலைககருமபோ | லவரையாடடதே (மதி) |
| ௫௨ | நெடுநேரமபடுததுத | தூஙகாதே - தூஙகும |
| | விடியாமூஞசிகளுககு | விசனமநீஙகாதே (மதி) |
| ௫௩ | ஆணையுஞ சீறி | யேசாதே-வேலைக |
| | காரரகளுடனே சக | கநதமபேசாதே (மதி) |
| ௫௪ | புருஷாகளபாரகக | கிலலாதே-கோடி |
| | வருடம வாழவதுபோலதுன | மாரககஙகலலாதே (மதி) |
| ௫௫ | தஙகைக, அககாள, அணணன | தமபி-மேலே |
| | சஙகையு மனபுள | ளவனதஙககமபி (மதி) |
| ௫௬ | சறறுங கூலியைக | குறைககாதே - செயத |
| | குறறததைபபொய சொலலி | நீமறைககாதே (மதி) |

௫௭ பண்டங் களையழிக்க — காதே சும்மா
கண்டபடிசெல்லே — கலைக்கிழிக்கக்கூதே (மதி)
௫௮ உன்னைப் புகழ்ந்து — கொள்ளாதே-பிறர்
நன்னயப் புகழ்ச்சியை — நம்பித்துள்ளாதே (மதி)
௫௯ மிஞ்சினசெலவு — செய்யாதேசெய்து
கஞ்சிக்குக்காற்றுக்குப் — பறந்துநையாதே (மதி)
௬௦ மெய்ச்சொல்ல மேன்மையுண் — டாமே-தினம்
பொய்ச்சொல்லும்வாய்க்குப் — புசிப்பற்றுப்போமே (மதி)
௬௧ நகைதுணியிரவல் — வாங்காதே-வாங்கில்
சகலருமேசுவா — தாழ்வுநீங்காதே (மதி)
௬௨ மங்களமாகநாள் — போக்கு-கைக்குக்
கங்கணம் போடவே — காய்கரியாக்கு (மதி)
௬௩ வீட்டுக்கணக்கெல்லா — மெழுது-நல்ல
ஏட்டுக்கணக்கருக் — கில்லையே பழுது (மதி)
௬௪ மட்டினறிக்கடன் — வாங்கல்தீது-ஐயோ
குட்டிச்சுவரில்முட்ட — வெள்ளெழுத்தேது (மதி)
௬௫ கடன்களைத் தீர்க்கத் — தப்பாதே-கண்ட
இடமெல்லா முன்குறை — யெடுத்துச்செய்யாதே (மதி)
௬௬ வெள்ளமா யாசைப் — படாதே - கையில்
உள்ளதுபோது — முறுகிவிடாதே - (மதி)
௬௭ எல்லாங் கை — கூடிவாராதே-நமக்
கில்லாரவழக்கைக்கண் — ஞடிதாராதே (மதி)
௬௮ எவராலுமேயிசை — யாதே - செய்த
அவனைச்சியாம் — லனுவசையாதே (மதி)
௬௯ ஈன ராளுலும் — காயாதே - சிறு
பூனைபோலிருந்து நீ — புலிபோறப் பாயாதே (மதி)
௭௦ கண்டெடுத்தப்பொருளை — நீயே - சொந்த
பண்டக்காரரைத்தேடிப் — பரிந்தளிப்பாயே (மதி)
௭௧ களவாகைப் பொருளைவாங் — காதே - வாங்கும்
உளவரில்லா விட்டாற் — கள்வேது? மாதே! (மதி)
௭௨ அநியாயவட்டி — வாங்காதே - வாங்கில்
இனியகைம் முதலும்போம் — ஏக்கம் நீங்காதே (மதி)
௭௩ அளவு நிறைவைக் — குறைக்காதே - ஒரு
சுளகாலே யானையை — நீமறைக்காதே (மதி)
௭௪ அகவிலே தன்னை — யேறுதே - காளுடம்
தக்கவேசெல்லரப்பணம் — தன்னை மாறுதே (மதி)

எ௫ புணணியஞ செயயக கூசாதே - இநத
மணணிலிருநதுவழக கோரம பேசாதே (மதி)

எ௬ நடககுஞ சநதிராதிததா மாதே தெறகு
வடககானுலும வாாததைதபபாதே (மதி)

எ௭ ஒனறுக்குமஞசி நிலலாதே பாலைக
கனறுக கிலலாமற கறககசசொலலாதே (மதி)

எ௮ தீயா சொலலைபபொருப பாயே எட்டிக
காயெனறுசொனனுற கசககுமோவாயே? (மதி)

எ௯ தீயெனறு சொனனுலவாய வேமோ? கெடு
வாயெனறொருவாசொலலில வாழவெலலாமபோமோ (மதி)

அ௦ புகழு மிகழுமவாயக கறறு - இதில
மகிழவும வருத்தமும கொளளாமல மாறறு (மதி)

அ௧ சதிகாரா வலையிற படாதே - கலவி
மதியிலலாதவனுககு வாழககைபபடாதே (மதி)

அ௨ குணவா னெளிய ஞனுலும - அவன
மணவாளனுவது மாசெலவமபோலும (மதி)

அ௩ புகழுடையோனை விடாதே - துஷடன
மகாராஜனுனுலு மாலையிடாதே (மதி)

அ௪ அடககம பொறுமைதனை சாநதம - என
நடககும நறகுணஙகளே நாரிககுபபாநதம

மதியிது மதியிது பெணணே புணணிய
வழியலல வேறலல மகாசிகணணே !

---

## புருஷபததி

அ௫ புருஷனமே லொழியாத பததி - உளள
தருமதேவதைககலலோ சகலமுஞசிததி (மதி)

அ௬ காததாவே முதலதெயவம மானே - பினபு
பாததாவல லானுணடோ பாககியம? தானே? (மதி)

அ௭ துணைமக ளானுலும பாரி - கொணட
உரியவனுககவு ளூழியககாரி (மதி)

அ௮ காதமண பக்ஷமே லக்ஷம குணம
எதுமிலலாதவ ளெட்டிவிருக்ஷம (மதி)

அ௯ ஆவிததுணைவனமேற கோபம - செயயும
பாவியைக கணணுலே பாாததாலும பாபம (மதி)

௯௦ புருஷனால வாரததை தடடாதே-மூடமே
எருதுபோல நீசணடைககு கிடுபபுகடடாதே (மதி)
௯௧ தேகமுஞ சீவனுமா போல-கொணட
மாகணவ னுடன வாழவதுமேலே (மதி)
௯௨ செயத நனறி மறவாதே-பாததா
வைதாலு மடிததாலும வாயதிரவாதே (மதி)
௯௩ கணவனுன மேறபகை மூாககம - செயயில
குணமாகப பேசிக குலாவுதல மாககம (மதி)
௯௪ அருநதுணைவனறனை த தூணடு - அவன
திருநதுமபடி தினந தேவனை வேணடு (மதி)
௯௫ மாதுமேல வறமபு காடடாதே - உன தன
சாமிககு மாமிககுஞ சணடைமூடடாதே (மதி,
௯௬ தலைவ னெஞசைக கரைககாதே - மாமி
தலைமேல நீமிள காயரைககாதே (மதி)
௯௭ நாததிமேறககுறி கடடாதே - வெகு
க்ஷாததிர மாயவள தலையை வெடடாதே (மதி)
௯௮ தலையணை மநதிர தீது - கெடட
கலககககாரி களுககுக கஷடமபோகாது (மதி)
௯௯ வீடடுககுகதிபதி நீயே - வெளி
நாடடுக கதிபதியுன னாயகன செய?
மதியிது - மதியிது - பெணணெ புணணிய
வதியலல வோநலல மகராசி? கணணே

---

## கறபு

௧௦௦ கறபு நிலையேசிங காரம - அது
தபபினே ரழகு சப அலஙகாரம (மதி)
௧௦௧ சீவனபோற கறபைக காபபாறறு- யாாககும
சாவு தலைமேலே சாமியைபோறறு (மதி)
௧௦௨ அரைககாசுககு கழிநதிடட கறபு - நூறு
மரககாறபொன கொடுததாலுமவருமோ? நீசெபபு (மதி,
௧௦௩ அநநிய னழகு ஞனுலும - கறபின
மினனிலட'யாாககவன விஷநாகம போலும (மதி)
௧௦௪ கணவன குருபியா னாலும - கொணட
மணமக ளுககவண னமதனபோலும (மதி)

க0ரு பேரைக்கெடுப்பவள் பெண்டோ? - இந்த
ஊரைவாய் மூட வுலை மூடியுண்டோ? (மதி)
க0சு சரசங்கள் பேசிக் கெடாதே - புவி
அரசனேனுமப்புரு ஷனைக்கைவிடாதே (மதி)
க0எ வாசற்படிகட வாதே - பிறா
ஆசைப்பட வொரயி லாயநடவாதே (மதி)
க0அ சிற்றினந் தானரை நொடியெ-வரும
குற்றமும் பழிகளுங் கோடிபொற்கொடியே
மதியிது - மதியிது - பெண்ணே - புண்ணிய
வதியல்ல வோநல்ல மகராசி? கண்ணே

## பாலரைவளர்த்தல்.

க0கூ மக்களுக்கோரம் பண்ணாதே-உன்றன்
சக்களத்திபிள்ளைக்குச் சதிகளெண்ணாதே (மதி)
கக0 பலபிள்ளை பெற்றன்ன பாக்கியம! நன்மை
இலையெனில், மலடியா யிருப்பதுயோக்கியம் (மதி)
ககக புத்திராக்கண்புபா ராட்டு - தெய்வ
பத்தியும் புத்தியும் பாலைப்போலூட்டு (மதி)
ககஉ இளந்தையிலேகல்வி போதி - மிக
வளர்ந்தபின் னெழுதாலும் வருமோ நன்நீதி? (மதி)
ககரு இளக்காரம் பாலற்குத் தீமை- பின்பு
வளர்த்தகடா மார்பிற் பாய்ந்ததொப்பாமே
மதியிது, மதியிது, பெண்ணே-புண்ணிய
வதியல்ல வோநல்ல மகராசி கண்ணே

## பரோபகாரம்

ககச ஆருக்குஞ் செய்யுப் காரம் - பல
ஊருக்குமநல்லவட குணடோவிசாரம் (மதி
ககரு ஈயும் பிச்சையைத் தடுக்காதே - உன்னை
பேயென்றொருவர் சொல்லப் பேரெடுக்காதே (மதி
ககசு துக்கமுள்ளோரை நீ தோற்று - வரும்
அக்குருடா மூட வா பசியாற்று (மதி

கக௭ தாயபோ லெண்ணியனைத் . தாங்கு-லெறும்
வாயுற வுமமன வைரமுமகீங்கும (மதி)

கக௮ பிணியுடையோரைநீ தேடு-கடடத
துணியுடன காயகழி சோறு நீபோடு (மதி)

கக௯ பாததிரமறிநதிடு பிடசை-தபபுக
தோததிரஞசெயவோரைத தூாததுதலபிடசை (மதி)

க௨௰ புததியில லாாகருநீ போதி-தெயவ
பததியில லாாகருநீ படிபபிததால் நீதி (மதி)

க௨க நனமையி னறகுறை யேது?-பெருந
தினமைசெய தோாககுமநீ செயயாதேதீது (மதி)

க௨௨ பூமியிலேழைபோல வேஷம-கொணடு
சாமியே வருவானநீ தளளுதலதோஷம (மதி)

க௨௩ நகர மோக்ஷநகொணடு வருவார-தீனா
தருவோாகஙகொனறீவாா தராாகஙகொனறு தருவாா (மதி)

க௨௪ பலவகை யேழைகள நிமிததம-அததன
செலவமைபபடைததனன ஜெகததில்பிரசிததம (மதி)

க௨௫ யாசகா களையுப சரியே-ளவாகக
வாசலில தொணடமாலுக தோடடியுஞசரியே (மதி)

மதியிது மகியிதுபெண்ணே-புணணிய
வழியலல வோநலல மகராசி கண்ணே.

---

## ஞானம

க௨௬ பூதல வாழவெலலாம பொயயே-இஙஙே
ஏதுமிலலாம லிறபபது மெயயே (மதி)

க௨௭ எததனைபோ புவி யாணடாா?-முனனம
அததனைபோகளும இனியபோ யாணடாா (மதி)

க௨௮ பாடடனாா பூடடனா ரெஙகே?-போக
மாடடோமெனறுநா மரணமஙகுயஙகே (மதி)

க௨௯ பூமியே நாடக சாலை-இதில
சாமிதநதாரே சகலாககும வேலை (மதி)

க௩௰ வாவென று தேவனைக் யோலை-வநதால
கோவென ழுதாலுங கூடுமோ வேலை (மதி)

க௩க ஆவியெனபதொரு புசசு-இது
பேவியொடுஙகினால் வெறுஞசொனனபேசசு (மதி)

கஙஉ. எட்டிப்போ, போ — வென்னும வீடு-கையைக்
கொட்டிவா, வாவென்று — கூப்பிடுங்காடு (மதி)

கஙங. பாழுடல மாமிச — மூட்டை-இது
விழுப பலஜெநது — வுக்குநலவேட்டை (மதி)

கஙச. கும்பி யுடலபுகை — யோட்டம்-இதை
நமபியிருககுமே — நாயநரிக்கூட்டம (மதி)

கஙரு. தங்கமும வெள்ளியு — மண்ணே-என்றும
மங்காதமோகூததின — வாழ்வைநீயெண்ணே (மதி)

கஙசூ. தனமிருநதா லிற — வோமோ? - தூங்கும
கனவிற கணடவாழ்வுக — காயகறிககாமோ (மதி)

கஙஎ இலைபோலவயிறெரு — சாணே-பொருள
மலைமலையாயச சோதது — வைககுதலவீணே (மதி)

கஙஅ. நவமணிபலவகைக — கலலே இநதப
புவன சுகஙகளெலல — லாஞசிறு புலலே (மதி)

கஙகூ ஆஸதியுனகூட — வராதே-கட்டிக-
காததிருநதாலுமுன — கையிலிராதே (மதி)

கசய. உணபது காறபடி — சோறு-பூதம
எணபதுபோலவேலி யேனிரு — நூறு? (மதி)

கசக இருககு மிடமுழந — தானே-நாலு
தெருககளிலுமபல வீடுக — ளேனே? (மதி)

கசஉ பிழைபபுக குரியபிணடாந — துணடம-அனறிப
பழிபபுக கிடமலலவோ — பலபலபணடம (மதி)

கசங. நகையிலலாக காது — கேளாதே புல
வகைபட்டிலலாவுடல — வளாநதுநீவாதோ (மதி)

கசச. குசசுவீட்டினபங — காட்டாதோ?-பெரு
மசசுவீட்டிலேதுனபம — வரமாட்டாதோ (மதி)

கசரு. பணங்கணடாலநமனுச — வானோ-நலல
குணமாகப்பணககாரருடன — கொஞசுவானோ (மதி)

கசசூ தோலுமெலுமபுஞ — சரீரம-இதை
மேலேமினுககுவதாலெனன — சாரம (மதி)

கசஎ. செட்டி தட்டான — செககானலே-வாந
ஓட்டமுகனறி உளளது வெறுநதோலே.

மதியிது மதியிது பெணணே புணணிய
வதியலல வோநலல மகராசிகணணே.

௧௪௮ மாற்றுவாய் பாவத்தை நீயே-நல்ல
காற்றுள்ளபோதே நீ தூற்றிக்கொள்வாயே (மதி)

௧௪௯ அகங்காரம் மோகம் உலோபம்-பகை
மிகுங்கோபம் பேருண்டி சோம்புகல்பாபம் (மதி)

௧௫0. மண்ணிலுண்டாகொலனு நஞ்சு-நெஞ்சில்
எண்ணிடக்கொலைவதுபாவமேனு நஞ்சு (மதி)

௧௫௧ எவரையும் பாவம் விடாதே-நிலம்
அவரவர் வினைக்கத்தவனை கொடாதே (மதி)

௧௫௨. பாவஞ்செய்யவிரும்பில அம்மா-ஆதி
தேவனருளொழிந்து தியங்குவாய் சும்மா (மதி)

௧௫௩ தீதுசெய்தால் நன்மை தருமோ-வேம்பை
நீதான் விதைக்கக்கரும்பு வருமோ (மதி)

௧௫௪ தையலே யுலகங்கண் ஞாடி-நாம்
செய்வதை யெய்து செய்யுமே தேடி (மதி)

௧௫௫ வைவாரைவையுமே யுலகமு-தினமே
செய்வாருக்கெய்து செய்யுமேசலகம் (மதி)

௧௫௬. தன்வினை தன்னைச்சுடும் மயிலே-பாமமே
முன்வளர்த்த தவாக்கமு தீயுமோ குயிலே (மதி)

௧௫௭ இங்குமே துஷ்டநிக கிரகம்-மானே
அங்குமே பாவத்துக் கவியாக நாகம் (மதி)

மதியிது மதியிது பெண்ணே-புண்ணிய
வதியல்ல வேறல்ல மகராசி கண்ணே

---

## புண்ணியம்.

௧௫௮ "புண்ணியஞ் செய்யலாம் நாளை என
எண்ணி யிராதே" இதுநல்ல வேளை (மதி)

௧௫௯ புண்ணியம் பாவ மல்லாது-இங்
மண்ணில் நம்மிடமொன்றும் வந்து நில்லாது (மதி)

௧௬0, நமனைக்கிவேசலஞ் சாந்தி-செய்யுந
தினமைகளை நீ தினம்பரி சோதி (மதி)

௧௬௧. தாமதத்தைப் பாவம் வெல்லாதே-துஷ்ட
காமத்துக் கஞ்சிக் கலங்கி நில்லாதே (மதி)

௧௬௨. அகந்தைகள் செய்யப் படாதே-பிற
புகழ்ந்தாலும் இகழ்ந்தாலும் புண்ணியமிடாதே (மதி)

சரணங்கள்

௧. அதிகப்பேச்சுக்காரி பெரும் வம்பி
ஆயிரமானாலும் அவள் வேண்டாந் தம்பி
நித்தந்தூற்றிடலாம் நீட்டுவாள் கம்பி
நிச்சயமவளாகாள் நீயென்னைச் சொல்லு நம்பி (நல)

௨. எழுத்துவாசகம் அறியாதவள் மட்டி
ஏதுமறியாளவள் சுரண்டுவாள் சட்டி
கழுத்திலேயவளுக்குத் தாலியைக் கட்டிக்
காரியமில்லை அது காக்கு ரக்ஷடி (நல)

௩. அழகுங்குணமுமுள்ளவள் நல்ல ஜோடு
அழகில்லைபாயினும் குணங்களையே தேடு
பழகுநற்குணமில்லா அழகியின் வீடு
பாம்பு புலிகரடி வாழுந்திடுங் காடு (நல)

௪ வீட்டுவேலைதெரி யாதவள் வேம்பு
மினுக்கும் அவளுக்குமே வெறும் வீம்பு
கூட்டுநற் குணமில்லாக் கொடியவள் பாம்பு
குலத்தைக் கெடுக்கவந்த கோடாலிக் காம்பு (நல)

௫ நகைகள் தரித்து மஞ்சள் வாடைகள் பூசி
நாட்டங்குத் தெரியவே நகைத்துக்கை வீசி
சொக்குக்கட்டப்பல ளாயிரந் தாசி
சும்மாவந்தாலுமவள் வேண்டாஞ் சீசீ (நல)

௬. தேவதா பத்தியில லாதவள் கள்ளி
திருட்டுக்கும் புரட்டுக்கு மவளொரு வள்ளி
தாலிப் புருஷனைக்குடிக் கவள்பெருங் கொள்ளி
சனியனை விலக்கு வாங்காமல் நீதள்ளி (நல)

௭ உடைமைக் குடும்பத்தை காசினமே வீச்சை
உள்ளவள் சண்டைக்கு கட்டுவாள் கச்சை
இடைவிடாம விளாறு கெடுப்பேனென இச்சை
இவளைக்கொள்ளுவதிலும் எங்கேகலாம் பிச்சை (நல)

௮. சநதகந கணவனமே — லொழியாபபததி
சாநதம பொறுமை — தயைகானம நறபுதகி
எநதவேளையுமுட — லாததும சுகதி
இலலாதவளவன — கழுததுககுக கததி (நல)

௯. நலலவ ளேனைழ — யாணுனுந கொடாதே
நாணூறுபோனுலும — நீபின னிடாதே
பொலலா தவளகையிற — காட்டிக கொடாதே
புலியைககொணடுவநதெனனைத — தெருவிலவிடாதே (நல)

௧0 சகல காரியஙகளுந — தெரிநதவள சிலாக்கியம
தரிததிரதசையிலு — மவளபெருமபாககியம
இகபரமிரணடுககு — மவள யோககியம
எனறுசொனனனே — வேதநாயகனவாககியம (நல)

---

## தூதன பெணபாாததுவநது சொலலல

சௌராஷடிரராகம-அடதாளசாபபு

பலலவி

பஞசவாணககிளிபோ லொருபெணணைநான
பாாததுவநதேன சுவாமி

அநுபலலவி

கொஞசமுஞசநதேகமிலலாமலே அநதக
கோலமயிலேசீா — கொளளுமம-அநு
கூலம வநதெனறு — துளளுமம-நலல
காலங கவலையைத — தளளும (பஞசவா)

சரணஙகள

பூரணசநதிரன போலுமுகததுககுப
பூமியி லுணடோச — மானம-தெயவப
பூவையாசுநதரம வேணடில-அவளிடம
போயவாஙக வேணடுமே — தானம-அநத
நாசிகணவாய்செவி முகககுவமையை
நாடடுவது மதீ — மீனம-அவள
கணடயமககுஙக சடையமககுமே

நானெனசொலவேணுட                                          மானம்-அந்த
மானினசொலலோதேவ                                          கானம்-இடை
தானுணடென்பதேது                                          மானம்-நாறு
மீனஙகணணெணி லவ                              மானம(பஞசவர்ணக)

உ, பாககியவதியவளபககததிருநதாலும
பாவமெலலாமபறந                                          தோடும்-அவள
பாலவடியுமுகம பாரத்தாலுமபோதும செள
பாககியம வநதுவிளே                                          யூடும்-திரு
வாக்காளவள "மழைபெய" யெனறுற பெயயுமே
வாணிகக யாராலே                                          கூடும்-கிட்டி
வநதுமககுத துரநதரயோகம
வருததததை நீதளளிய                                          போடும்-இனிக
கருததிலவளேயே                                          நாடும்-நலல
பொருததம ஆனநககசுூத                                          தாடும(பஞ)

ங. வெளளியுந தஙகமும அளளிக்கொடுததாலும
வேறொருவாமுகம                                          பாராள-நலல
மேனமைததுரைமகளானாலும வீட்டு
வேலைககுபினனிடடுச                                          சோராள-நிதந
தளளிநீரவைததடித தானுமகை நோகுமே
சாமியெனறுதொழுது                                          சீராள-பெறற
தாயதகபபனழைததாலும உடமைவிடடுச
சறறுமபிரிநதிட                                          நேராள-பழு
தறறநவமணி                                          சோரள-நாளுந
குறறமுளளோரசபை                                          சேராள-செயந
நறறவததாலனறி                                          யாராவ (பஞசவா)

ச. காரியமபாரபபவள கணககுமெழுதுவள
காய கறியாககவுந                                          கெட்டி-அவள
கைபட்டால வேமபுங கருமபலலவோ ருசி
கண்டு நீர மணடுவீர                                          சட்டி-அவள
ஊரிலேமாமியார நாததிமார் எலலாம
உவநதிடு கறகணடுக                                          கட்டி-தினம
ஓயாவிருநதுவநதாலுஞசலியாமல
உணணசசொலவாள அனனங                                          கொட்டி-அநத
வணணககுயிலோ நீ                                          கிட்டி-இரு

ஆதனபெணபாரததுவநது சொலலல.

அ நீமகிழநதால, அவள தானமகிழவாள, துனபம
நீகொளளின, அவடகுளி சாரம-அனனம
நீருணணில, அவளபசி தீரும, இருவாககும
நீசசயமேக சரீரம-இநத
ஊரிலநிலலாதபோ துறஙகாள, அனனம
உணணாள, பணணா ளலஙு காயம-நீ
ஊமைகுருடாா ஞானுசெயவாளுமக
குரிமையாய ராஜோப சாரம-அனல
பரமாதருடனீசனு சாரம-செயல
வருமவளுடைய நிஷ்ட நேரம-அநத
கொருநாளுமிலைபரி காரம
(பஞசவாணக)

௯. பாவமீசெயயசசொனனானு செயயாள, வேறே
பணணுளுமககப சாரம-பெறும
பாலாககுநலவழி காட்டித, தினமும
படிபபிபபாள வேதாநத சாரம-வநது
தாவுமெளியவாக கிலலையெனறுமலே,
தாயபோற செயவாளுப காரம-செலவந
தாழினும, ஏழைககுத தானுணணுமனனததைக
தநது, மெலிவாள சரீரம-தம
யநதிபு மோநமல காரம-செயயும
சுநதரி சீலமவிலை தாரம-உமக
சநதமின னேநலல தாரம
(பஞசவாணக)

௧0 பாயுமபடுககையு மகாநோயகொணட ாலும
பாததா வேலைககுபின வாஙகாள-உநதம
பசுஷமொனறேகோடி லசுஷமெனறெணணிப
பலதுனபம வநதாலும, ஏஙகாள-பெறற
தாயும, பிதாவும நிகாவேதாயகன
தாமனைபபாததகதை நீஙகாள-நலல
சகதியநிரநதனை, புததியினமநதிரி
சாடக குடிககனம பாஙகாள-வேலை
சட்டமுடியுமுன தாஙகாள-மனறுங
செட்டவளெனறுபோ வாஙகாள-உமக
கிஷட முளளாள, பழி யோஙகாள
(பஞசவாணக)

## தங்களுக்குப் படிப்பிக்கும்படி ஸ்திரீகள் புருஷர்களை வேண்டுதல்



இராகம்-நாதநாமக்கிரியை, தாளம்-ஆதி.

பல்லவி

வித்தையைப் படிப்பியுங்கள் - நயைசெய்து
வித்தையைப் படிப்பியுங்கள்

அநுபல்லவி

உத்தமநாயகரே! சத்தியப்பிரமாணரே!
உங்கட்குக் கண்களான பெண்சாதியெங்களுக்கு
வித்தை

சரணங்கள்.

க. திருத்தமாயேலைகளெல்லா முடிப்போம், வேலை
தீர்ந்தபின் புஸ்தகங்களே படிப்போம்
வருத்தம் நீர் படக்கண்டால், மனந் துடிப்போம், கீத
வண்ணங்கள் பாடிக்கொண்டு கால் பிடிப்போம், பாட
மாட்டோமோ? வீணை
மீட்டோமோ? நயங்
காட்டோமோ? சுகம்
ஊட்டோமோ? நல்ல
வித்தை.

உ. வரவுசெலவின் கணக்கெழுதி வைப்போம், பல
வகைவகையுடுப்புகளுமக்குத் தைப்போம்,
பரவும் பல தொழில் நீர் பண்ண வொப்போம், நல்ல
பக்ஷணங்கறிகளுஞ் செய்யத் தப்போம், நாங்கள்
படியோமோ? இருள்
விடியோமோ? மருள்
முடியோமோ? அருள்
பிடியோமோ? நல்ல
வித்தை.

௩. வாணியும நீரும ஒரு
வரமபிரசாதம உமககு
விணிலவட கெஙகணமேல
மெஞஞானமாககததுககாக
வெலலேலாமோ?
சுலலேலாமோ?
சொலலேலாமோ?
இலலேலாமோ?

சோதககிரமா?
மாககிரமா?
ஷாததிரமா? நாஙகள
பாததிரமா, உமமை
கலவி
கவி
புகதி
நலல

விததை.

௪. கொஞசம நீர கோபம செயயில,
குறறமபொறுககசசொலலிக
தஞசமதாக உமமை
சாகிததியம செயது தினம
தாழநதோமே?
ஆழநதோமே?
சூழநதோமே?
வீழநதோமே!

அஞசிடுவோம, எஙகள
கெஞசிடுவோம
நமபிடுவோம, உமமேல
கும்பிடுவோம, நாஙகள
துயா
உமமைச
காவில
நலல

விததை.

௫. அடிததாலு மிகழநதாலுஙகதி
அன்றி எஙகளுக கினிததுணை
படிததாறபிழைததுமபோவோமபெரி
பஞசைகள முகம பாருநதுரை
பகம பூணடோம!
மதம நீணடோம!
இதந தாணடோம!
கதமவேணடாம!

நீரே-உமமை
யாரே
யோரே! இநதப
மாரே! உஙகள
அபி
உஙகள
அசங
நலல

விததை.

௬. படியாத ஆணகளுடனே
பணண நீர சமமதியீர லவ
மடமுரு மெஙகளுடன சக
மடடு முமக கிலலையோ சங
மதிமோசம
அதிஹாசம
பதிபாசம
இதிகாசம

நேசம-சறறுய
லேசம
வாசம-செயய
தோஷம! இது
வரும
மனம
அற
உடன

விததை

படிபபிக்குமபடி வேணடல

இராகம-மோகனம-தாளம-ஆதி.

பலலவி.

கேளும, பூமான்களே! திருணாமைத
காணும சீமானகளே

அநுபலலவி

நாளுங கதி யிலலா எஙகளமேல   வாமமோ?
காணுறுங [illegible]சிபோல தளளுதல   காமமோ?
கேளும,

சரணஙகள

க. காலைககு மாலைககு மூலைககுள எஙகளை
ஆலைககருமபுபோல   செயதிடிபபாக
சாலைககு மனமத லீலைககு மேவினா
வேலைககும எஙகளை   மாயததீர
மூலைககலவிநாஙகள வாசிததா லா   பததோ
மூடபபெண கொணவீ ருமககுப பெரும   பிததோ?
ஓலைக கிரநதஙக ளுஙகளபாடடன   சொததோ?
உமககென்ன காணுங கலைமேற றலை   பததோ?
கேளும

உ ஆதியிற பெணணாலே மேதினியோாகளுண
டானவகை   மறநதீரோ? பெண
சாதி புருஷனிற பாதியென்ன மனு
நீதியை யுநதுற்ந   தீரோ!
பாதி யுடலைப பறககு   விடலாமோ!
பாவ புணணியங தெரியாமற   கெடலாமோ!
நீதியிலலா தெமமை நிநதித   திடலாமோ!
நிநதிததுமபின னெஙகளை நீர   தொடலாமோ!
கேளும.

௩. நாரியனை ஒரு காரியமிலலா
நடைபிணமென றெணணி   நீரே! தேவர்
ஊரிற பெணகள கொணட சீரினை யாகிலும
உறறுபபாரு மைய   மாரே
பாரி தனை நாவில வைததான பிதா   மகன
பாகஞ சிரம வைததாற சிவனமா   சுதன
மாரபில வைததான ஹரி பெணதிருடன   குகன
மஙகை கேடிசசகதி வநதான கரி   முகன

கேளும்.

௫. உங்கட்குதவியா யெங்களைத தேவனுண
டாக்கியதையறி யீரோ! செல்வ
மங்கையுடன கலவி கறகை முதலானோ
மாதரென்று குறி யீரோ!
எங்களை யல்லாமல நீங்கள இதுதீரோ!
ஏறி யாகாயத திருந்து குதித்தீரோ!
அங்கப்பா லுணணுமல தேகம உதித்தீரோ!
அடிமை யெனறெங்களதலையில விதித்தீரோ!

கேளும்

௬. போதகயூரோப்பு மாதாகளைககணடு
பொங்கிய பொறுமைகொண டோமே, என்றும
பேதமில்லா இந்தியா தனிலநாஙகள
பிறந தெனனலாபங கணடோமே
நாதக கலவிக்கு நகையெந்த மூலையே
நாஙகள விரும்பியோம நவரதத மாலையே
வேதநாயகன செய பெணமதி மாலையே
வேணடினோம தாரும், விடோமஉஙகள காலையே

கேளும், பூமானகளே? கிருபைவைத
தாளும் சீமானகளே?



# பெண்கல்வி



இந்தத் தேசத்துப் பெண்கள் கல்வியில்லாமையினால் அஞ்ஞான இருளில் ஆழ்ந்திருக்கிறார்களென்பது யாவருக்குந் தெரிந்த விஷயமாயிருக்கின்றது. பெண்களுக்குக் கல்வி ஆவசியகமெனப்தைச் சிலர் ஒப்புக்கொண்டாலும், அநேகர் பெண்கள் படித்து என்ன உத்தியோகஞ் செய்யப்போகிறார்களென்றும், அவர்கள் படித்தால், புருஷருக்கடங்கி நடவாமல் வித்தியாகர்வத்தினால் கெட்டுப்போகிறார்களென்றும் துராக்ஷேபஞ்செய்கிறார்கள். தெய்வபக்தியும் விவேகமும் நற்குணங்களும் உண்டாவதற்காகக் கல்விகற்பதேயல்லாது உத்யோகமே செய்வதற்காகவோ? அல்லவே. நெல்லுக்கிறைக்கிற தண்ணீர், புல்முதலிய பூண்டுகளுக்கும் உபயோகமாவதுபோலவும், பானத்துக்காக வெட்டுகிறகுளம் ஸ்நானமுதலியவற்றிற்கும் உதவுகிறதுபோலவும், பழத்துக்காக வைக்கும் விருக்ஷம் நிழல்முதலியவற்றிற்கும் உபயுக்தமாவது போலவும், புத்தியின் அபிவிர்த்திக்காகப் படிக்கப்படுங் கல்வி உத்தியோக முதலியவற்றிற்கும் சாதனமாகிறதே தவிர படிப்பதற்கு உத்தியோகமட்டுங் காரணமென்று சொல்வது குல்லாவுக்காகத் தலையல்லாமல், தலைக்காகக் குல்லா அல்லவென்று சொல்வதற்குச் சமானமா யிருக்கின்றது.

சரீரத்துக்கு ஆகாரம் எப்படியோ அப்படியே கல்வியானது புத்திக்கு மிகவும் ஆவசியமாக யிருக்கின்றது. நாளுக்குநாள் வளர்கின்ற சரீரத்தைச் சுவாமி நமக்குக் கொடுத்திருந்தாலும் அதற்குத் தகுந்த ஆகாரங்களைக் கொடுத்துச் சௌக்கியத்துக் கடுத்த காரியங்களையெல்லாம் நாமேதேடிக்கொள்ளாவிட்டால், சரீரம் வளரமாட்டாதே. அப்படியே கடவுள் நம்மை ஞானத்மாவாகச் சிருஷ்டித்திருந்தாலும், நம்முடைய சுபாவஞானம் எவ்வளவும் போதாமலிருப்பதால் கல்வியென்கிற ஆகாரத்தைக்கொடுத்துப் புத்தியை அபிவிர்த்திசெய்யவேண்டியது நம்முடைய கடமையாயிருக்கிறது.

"செவிக்குண வில்லாத போழ்து சிறிது
வயிற்றுக்கு மீயப் படும்"

என்று திருவள்ளுவநாயனாருஞ் சொல்லியிருக்கிறார்.

நம்முடைய மனம் எப்படிப்பட்டதென்றால், ஒருக்ஷணப்பொழுதாயினுஞ் சும்மா இராமல் பூமண்டலம், ஆகாசமண்டலம் முழு

வதும சஞசரிததுசகொணடிருககினறது நாம சுமமாயிருநதாலும, வேலைசெயதாலும, படுததிருநதாலும, நிததிரை செயதாலும, தனனுடைய சஞசாரததுககு எபபோதும ஓயவிலலை, தனககுக களைபபுமிலலை, இளைபபுமிலலை, எனனும இததனமையது இபபடிபபட்ட மனததுககுக கலவியெனகிறதுணைவ னிலலாவிடடால, கடிவாளமிலலாத குதிரைபோலவும் கணடபடி திரியுங குரஙகுபோலவும கரைகடநத வெளளம போலவும, கடடுககடஙகாத காளைபபோலவும அதுதேசமெலலாநதிரிநது நமமைத தூககுணமாகிய காட்டிலும, மேட்டிலும, கலலிலும, முளளிலும, இழுதது, முடிவில நரகமெனகிற பாதாளததில, தளளிவிடுமெனபதறகு எவவளவும சநதேகமிலலை, இநதக காரணததைபபறறியே ஆணபிளளைகள உததியோகஞசெயய விருமபினாலும விருமபாவிடடாலும, அவாகளுககுப படிபபிபபது வழககமாயிருககினறது

பெணகளுடைய மனமும, புருஷாகளுடைய சிததமும, ஒரே தனமையாயிருபபதால, பெணகளுககுமட்டும கலவியை போதியாவிடடால, அவாகளுடைய சிததம எபபடி நனமாாககததிலே நிலைகொளளும? "காசுககொரு குதிரையும வேணடும, காறறைப போலபபறககவும வேணடும" எனபதுபோலவும "புலலுணணாத பசுவும வேணடும பூரணமாகக கரககவும வேணடும' எனபதுபோலவும எதிரகா படிககாதவாகளாயிருககவும வேணடும, உததமிகளாய நடககவும வேணடும எனறால, எபபடி நமமுடைய மனோரதம நிறைவேறும? மாவுககும ஆசை பணியாரததுககும ஆசையா?

"விலஙகொடு மககள னையா இலஙகுநூல
கறறாரோ டேனை யவா"

மனிதாகளுககும மிருகஙகளுககும எவவளவு பேதமோ, அவவளவு பேதமுணடு கறறவாகளுங கலலாதவாகளும, என்று திருவளளுவ நாயனா சொலவதுபோல ஆணபிளளைகளுககுள படிததவனுககும படியாதவனுககும உளள பேதததை நாளதோறும காணகிறோம படிததவன கூடியவரையில தனனுடைய படிபபுககுத தகுநத புததியும நலலொழுககமும யாதொருமானமான ஜீவனஞசெயயத தகுநத திறமையும, உளளவனாயிருபபான படியாதவனோ எனறால, பரமசுணடனைய மாடு மேயககவும, விறகு தூககவும, மணகல முதலியவைகளை வெட்டிசுமககவும மறறும பல கஷடமானவேலைகள செயயவுமே உபயோகபபடுகிறான. மேலும், கொலை, திருடு, கனனம, பெருஙகொளளை முதலான குறறஙகளைச

செய்கிறவர்களெல்லாம் படியாதவர்களே யன்றி, படித்தவர்கள் அந்தக் குற்றங்களில் ஏதேனும் ஒன்றைச் செய்வது மிகவும் அரிது. ஆடவர்களுக்குள் கற்றவனுக்கும் கல்லாதவனுக்கும் ஏணிவைத்துப் பார்க்கும்படியான இவ்வளவு பாரதூர வித்தியாச மிருக்கும்போது, பெண்களுக்கு மட்டும் படியாமலே சகலசற்குணங்களும் உண்டாகுமென்று நினைப்பது வீணே. படியாத ஸ்திரீகள் விசேஷ கடவுளுடைய கிருபையால் இவ்வளவாவது நல்லவர்களா யிருப்பதற்காக நாம் ஆச்சரியப்பட வேண்டியதைவிட்டு, அவர்களில் சிலர் துர்க்குணமுள்ளவர்களா யிருப்பதற்கு ஆச்சரியப்பட இடமேயில்லை. கல்லாத ஸ்திரீகள் விவேகிகளா யிருப்பது எவ்வளவு ஆச்சரியமென்றால், முடவர்கள் ஆடவும், குருடர்கள் அந்த ஆட்டத்தைப் பார்த்துச் சந்தோஷிக்கவும், ஊமைகள் பாடவும், செவிடர்கள் அந்தப் பாட்டைக் கேட்டு மகிழ்வுங்கொண்டால் எவ்வளவு அதிசயமோ அவ்வளவு அதிசயந்தான்.

பெண்கள் கல்வி கற்பதினால், அவர்களுக்குப் பதிவிரதாத்துவம் முதலிய சற்குணங்கள் அதிகரித்து, புருஷன்மேல் உண்மையான பக்தியும் விசுவாசமும் உண்டாகுமே தவிர, அவர்கள் ஒருநாளும் புருஷத் துரோகிகளாக மாட்டார்கள். நாம் இப்படிச் சொல்வது உண்மையென்பதற்கு எல்லாக் கல்வியும் உணர்ந்து புருஷர்கள்மேல் மாறாத நேசமும் அன்புமுள்ள ஐரோப்பிய ஸ்திரீகள் சாக்ஷிகளாயிருக்கிறார்கள். புருஷர்களில் சிலருக்குக் கல்வி கற்றும் நற்குணமுண்டாகாம லிருப்பதுபோல, ஸ்திரீகளிலும் சிலர் வித்தையை அப்பியாசித்தும் பிரயோஜன மடையாமற் போனாலும் போகலாம். அந்தக் காரணத்தைக் கொண்டு ஸ்திரீகளுக்குப் படிப்பிக்கக் கூடாதென்று சொல்வது முற்றும் பொருத்தமில்லாததாயிருக்கிறது.

ஒருவன் தன் பெண்சாதிக்குக் கண்ணிருந்தால் அந்நியபுருஷர்களைப் பார்ப்பாளென்று கண்ணில்லாத குருடியைக் கலியாணஞ்செய்து கொள்ளச் சம்மதிப்பானா? சிலசமயங்களில் பிள்ளைக்குத் தாய் பால் கொடுக்கும்போது பால் புரையேறிப் பிள்ளை இறந்துபோவதினால் பிள்ளைகளுக்குப் பால் கொடுக்கக்கூடாதென்று சொல்லலாமா? சகல பிராணிகளுக்கும் ஜீவாதாரமாயிருக்கிற மழை, வெயில், காற்று முதலியவைகள் சில சமயங்களில் சிலருக்குச் சேதத்தை யுண்டுபண்ணுவதினால், மழை, வெயில், காற்று முதலியவைகள் வேண்டாமென்று ஆணையிட்டு மறிக்கலாமா? அப்படியே வித்தியாப்பியாசத்தினால்

ஆயிரத்திலொரு ஸ்திரீ அகங்காரங்கொண்டு கெட்டுப்போனாலும் அதனால் மற்ற ஸ்திரீகளையும் படிக்கக்கூடாதென்று விலக்குவது யுக்தமல்ல, மத்தியானகாலவெயில் மஞ்சள்நிறமாகத் தோன்றுவது, காமாலைக்காரனின் குற்றமேயல்லாது, வெயிலின் குற்றமல்ல, சக்கரை கசப்பது வாயக்குற்றமே அல்லாது, சக்கரையின் குற்றமல்லவே குறுணி மையிட்டாலும் குருட்டுக்கண் நல்ல கண்ணாகாது போல, சிலர் படித்துக்கிருந்தாப்லிருப்பது சுபாவதுர்க்குணமே தவிர, கல்வியால்வந்த குற்றமென்று சொல்வது அசங்கதம்.

> "பொருந்துநற் சுகநெறி பூவை கற்பது
> இருந்திடே மித்ருவைப் பேயந்து போமெனல்
> வருந்திடா தயிர்சரு மருந்தை மானிடர்
> அருந்திடிற் சாவரென் றுரைத்த லொக்குமே"

நல்லகல்வியை உணருகிற ஸ்திரீயினுடைய கற்பானது திருந்தி வளருமல்லாது, கெட்டுப்போமென்று சொல்வது சாகும் உயிரை நீடித்திருக்கச்செய்யும், தேவாமிர்தத்தை மனிதர்கள் புசித்தால், இறந்துபோவார்களென்று சொல்வதற்குச் சமானமென்று நீதிநூல் மாதைப்படிப்பித்தலென்னும் அதிகாரத்தில் சொல்லப்படுகிறது

சர்வலோக கர்த்தாவும், சர்வஜீவ தயாபரரும், சர்வாந்தரியாமியும், சர்வவியாபியும், தர்மஸ்வரூபியும், அகிலாண்டகோடி பிரமாண்ட நாயகரும், ஆதியந்தமில்லாதவரும், மனோவாக்குக் கெட்டாதவரும், பஞ்சேந்திரியங்கட்கு அதீதரும், தேவாதிதேவரும், கோடி சூரியப்பிரகாசரும், பூதங்களுக்குக் காரணபூதரும், சூரியனுக்குச் சூரியனும், உடலுக்கு உடலும், உயிருக்குயிருமாய், இந்த உலகத்தைப்போல அநந்தகோடி உலகங்களையும், அநந்தகோடி சந்திரசூரிய நக்ஷத்திரங்களையும், உண்டுபண்ணி, அவைகளை ஆதாரமின்றி அந்தரத்தில் நிறுத்தி ரக்ஷிப்பவரும், கற்பகோடி காலங்களை நிமிஷமாகக் கழிக்கிறவரும், நித்திய நிர்மல நிர்விகார நிராக சாந்த நிஷ்பிரபஞ்ச பொருளும் ஆகிய பகவானைக் கல்வி அறிவினால் அறியலாமே அல்லாமல் வேறொன்றினாலும் அறியக்கூடாதே.

நம்மை ஞானரூபமாவாகப் படைத்து, நமக்காக அஸ்திபாரம் தூண் சுவர் முதலியவைகளில்லாமலே பூமியாகிய பெரிய அரண்மனையைக் கட்டி, ஆகாசமண்டபம் வளைந்து, நக்ஷத்திரங்களாகிய முத்து மேற்கட்டி தூக்கி, செப்பும் மெய்யுபதிரிய ஆலைமேகோளுமிதைத

சந்திர சூரியர் முதலிய தீபங்களையேற்றி, புல் பூண்டு முதலிய பச்சை ரத்தினக் கம்பளங்களைக் கீழே விரித்து, ஸ்வர்ணக்கோடிகளாலும் நவரத்நங்களாலும் நானாவித விநோத விசித்திரமாகச் சித்திரமண்டபத்தை அலங்கரித்து, மதுரமான கனிவர்க்கங்களும், பரிமளபுஷ்பங்களும் நிறைந்த சோலைகளையும், சிங்காரத்தோட்டங்களையும், மலைகளாகிய உன்னதசிங்காசனங்களையும், நதி, ஏரி, குளம் முதலிய நீராடுந்துறைகளையும், தாமரைத்தடாகங்களையும், ஆனை, குதிரை, ரிஷபமுதலிய வாகனங்களையும் கொடுத்து, சமுத்திரங்களும் மேகங்களுமாகிய மேளவாத்தியக்காரர்களையும், அன்னம் மயில் முதலிய நாடகசாலைப் பெண்களையும், குயில் முதலியபக்ஷிகளாகிய சங்கீதவித்வான்களையும், மேகக்குடங்களால் நீரிறைக்கிற ஆகாசப்பெண்ணையும், வாயுவாகிய ஆலவட்டக்காரனையும், அக்கினியாகிய சமையற்காரனையும், சம்பளமில்லாத ஊழியக்காரர்களாக நியமித்து, இன்னும் எண்ணிமுடியாத நன்மைகளையும், சுகபோகங்களையும் நமக்குத் தந்தருளிய பரமதயாளமூர்த்தியைக் கற்றறிந்த ஞானிகள் உணர்வார்களேயன்றி, கற்றறியாத மூடஜனங்கள் எப்படி உணர்வார்கள்?

பூகோளம், அண்டசாஸ்திரமுதலிய நூல்களைப் படியாவிட்டால், கடவுளுடைய பெருமையும், சருவசக்தியும், மகிமைப்பிரதாபமும், ஸ்திரீகளுக்கு எப்படி விளங்கும்? சுவாமியினுடைய மகிமையை அறியாத ஸ்திரீகளுக்கு அவர்மேல் எப்படி பக்தியுண்டாகும்? அக்ஷரரூபமாயிருக்கிற வேதவிதிகளையும், நீதி சாஸ்திரங்களையும், படித்தறியாத பெண்கள் எப்படி நல்வழியில் நடக்கக்கூடும்? கோவிலிலேதான் தெய்வமுண்டென்றும், கோவிலிலிருக்கிற விக்கிரகங்களைத் தவிர வேறே தெய்வமில்லையென்றும், நினைக்கிற பாமரஸ்திரீகள் மேற்படி விக்கிரகங்களில்லாத வீடுகளிற் பாவங்களைச்செய்ய அஞ்சுவார்களா?

ஸ்திரீகள் படியாவிட்டால் யானையையும் மலையையும்பார்த்த குருடர்கதையாக வல்லவோ முடியும்? அக்கதைகள் வருமாறு:— சிலகுருடர்கள்யானையை அறிந்துகொள்ள ஆசைகொண்டு, யானைக்காரனுடைய அநுமதியால் யானையைக் கைகளால் தடவிப் பார்த்தார்களாம். வாலைத்தடவி அறிந்தவன், யானைவிளக்குமாறுபோலிருக்கிறதென்றும், காலைத்தடவி அறிந்தவன், யானை உரல்போலிருக்கிறதென்றும், காதைத்தடவி அறிந்தவன், யானை முறம்போலிருக்கிறதென

றும், துதிக்கையைத் தடவி அறிந்தவன், யானை உலக்கைபோலிருக்கிறதென்றும், ஏனையில தாமறிந்தார் சொன்னார்களாம். ஒருகுருடன் மலையைப்பார்க்க விருப்பங்கொண்டு மலைக்குப்போகிறவர்களைத் தொடர்ந்துபோய், தனக்கையெட்டினவரையில் மலையைத்தடவிப்பார்த்து, தனக்கையெட்டின உயரந்தான் மலையென்று சாதிக்கிறதும் அப்படியே கல்லாத பெண்களுக்கு ஈஸ்வரநிச்சயமும் பிரமஞானமும் உண்டாவது அசாத்தியமல்லவா?

கடவுளினுடைய திவ்விய ஸ்வரூபத்தைக்குறித்தும் வேதாந்த விஷயங்களைக் குறித்தும் கல்லாத பெண்களுக்கு எவ்வளவுதான் போதித்தாலும் செவிடன் காதில் சங்கை ஊதினதுபோலவும், குருடனுக்குமுன் பந்தஞ் சேர்ப் பிடித்ததுபோலவும், சவரில் மழைபெய்ததுபோலவும், காட்டிற்கெறித்த நிலவுபோலும், அப்போதனை விபாக்கமாய்ப் போவதேயொழிய உபயோகமாகாது.

குருமார் முதலானோர் சொல்லுகிற சாதாரணமான பிரசங்கங்களுக்குக்கூடக் கல்லாத ஸ்திரீகள் அர்த்தங்கண்டுபிடிப்பது வருத்தமாயிருக்கிறது. அவர்கள் செய்கிற அர்த்தமெல்லாம் அநர்த்தமே. அவர்களுக்கும் பெரியவர்கள்சொல்லும் ஞானப்பொருளோ தாலாட்டாகமுடிகிறது. எப்படியென்றால் குருமார் முதலானோர் பிரசங்கம் ஆரம்பித்தவுடனே கல்லாத ஸ்திரீகள் அப்பிரசங்கத்தின்பொருளை அறிந்துகொள்ளக்கூடாமையால், மனதுசோம்பித்தூங்கிவிழ ஆரம்பிக்கிறார்கள். தாலாட்டு முடிந்தவுடனே பிள்ளைகள் விழித்துக்கொள்வதுபோல, பிரசங்கம் முடிந்தவுடனே ஸ்திரீகளுடைய நித்திரையும் முடிந்து விழித்துக்கொள்ளுகிறார்கள். கல்லாத ஸ்திரீகள் வீண் பிரயோசனமொன்றறத்தாமே! கேள்வியின் பிரயோஜனத்தையும் இழந்து, இரண்டுங்கெட்டவர்களாய்ப் போகிறார்கள். புருஷர்களே, ஸ்திரீகள் இப்படிப்பட்ட ஸ்திதியிலிருப்பதுதானா உங்களுக்குச் சந்தோஷம்?

கல்விக்குத் தெய்வமாகிய சரஸ்வதியே பெண்ணென்றுசொல்லுகிற இந்தத் தேசத்தார்கள் பெண்ரூபமாயிருக்கிற கல்வியைப் பெண்கள் படிக்கக்கூடாதென்று சொல்வது பூர்வோத்தரவிரோதமாயிருக்கிறதே. புருஷர்களுடைய நாவுகளிலே வசிக்கிறதென்றும், தன்னைப்போன்ற ஸ்திரீகளுடைய நாவுகளில் பிரவேசிக்கிறதில்லையென்று, சரஸ்வதி பிரதிக்கினைசெய்யாமலிருக்க, பெண்கள் கல்வியைப் படித்தால் தோஷமென்ன,

உலகத்திலிருக்கும் பெண்கள் பலவிதமான ஜனங்களைப் பலகாலங்களில் பலவித யங்களையுற்றி அவர்களுடைய ஆயுளெல்லாம் செலவழித்துக்கொண்டு ரூபமாகச் செய்திருக்கிற விஷயங்களே கல்வியென்று சொல்லப்படு கின்றன. அந்தப் புஸ்தகங்களைப் படிக்கிறவர்கள் அந்தந்த வித்வான் களுடைய புத்தியையும் ஞானத்தையும் சுலபமாகக் கிரகித்துக்கொள் ளுகிறார்கள். இப்படிப்பட்ட பரமப்பிரயோஜனத்தைப் புருஷர்கள் மட்டும் அடைவதுதான் நியாயமோ? பெண்களையும் அடையச்செய் வது நியாயமல்லவோ! இதென்ன அநியாயம்.

பெண்கள் படிப்பது பூர்வீகாசாரமல்லவென்பதாகச் சொல் துவாதம் செய்கிறார்கள். பட்டணம் சாப்பனும் படிப்பார் முன்னாக ளிருந்தால், பின்னையும் முட்டனும் இருக்கவேண்டும்! தாயின் உத்தி யோகம் செய்யாமல் இருந்தால், பின்னையும் உத்தியோகம் செய்யக் கூடாதா? பிராமணர்கள் வேதம் ஓதுகிறதல்லாமல் மற்றொரு தொழி லும் செய்யக்கூடாதென்றும், அப்படியே மற்றவர்ணத்தார்களும் தங் கள் தங்களுக்குரிய தொழில்களைச் செய்யவேண்டுமென்றும், மனு நீதியிற் சொல்லப்பட்டிருக்க, இப்போது பிராமணர்கள் வேதத்தை உபேக்ஷையாக விட்டுவிட்டு, மற்றவர்ணத்தார்களுடைய தொழில் களை அக்கிரமித்துக்கொண்டு செய்யவில்லையா? வேதபாராயணத்து க்குப் பதிலாகச் சட்டபாராயணமும், வைதீக ஜீவனத்துக்குப் பதி லாக லௌகீக ஜீவனங்களும் செய்கிறார்களே. கலப்பை ஆயுதத் தைக் கொண்டு பூமியையுழுது கிருஷிதொழில் செய்யவேண்டிய சூத்திரர் இறகென்கிற ஆயுதத்தைக்கொண்டு கடிதமாகிய பூமியை உழுது ஜீவனம் செய்யவில்லையா?

இங்கிலீஷ்காரருடைய தாமராஜ்ஜியத்தில் நம்முடைய பூர்வீக வழக்கங்களெல்லாம்விட்டு, நாளுக்குநாளும் சீர்திருத்தத்தையும் நாக ரீகத்தையும் அடைகிற நாம் ஸ்திரீகளுடைய பாவத்தைக் கட்டிக் கொள்வதற்காக மட்டும் அவர்கள் விஷயத்தில் பூர்வீக வழக்கப்படி அனுசரித்து அவர்களை அஞ்ஞானக்கடலில் அமிழ்த்துவது நீதியா?

பெண்கள் படிப்பது புராதன வழக்கமல்லவென்று சொல்வது அபத்தமே தவிர யதார்த்தமல்ல. திருவள்ளுவருடைய சகோதரிக ளாகிய ஔவை, உப்பை, உருவை, வள்ளியம்மை முதலானவர்கள் கல்விகற்று அநேக பிரபந்தங்களைச் செய்யவில்லையா? சைவர்களு டைய பெரியபுராணத்தில் பிரஸ்தாபிக்கப்பட்ட நாயன்மார்களில் ஒருவராகிய காரைக்காலம்மையும், வைஷ்ணவர்களுடைய குருபரம

பாரபிரபவததில் கூறபபடட ஆழவாரகளில ஒருவராகிய சூடிககொடுததநாசசியாருமபெணகளாயிருநதுங கல்விகறறு அநேகமஸதோததிரபபாடலகளைச செயயவிலலையா? அனறியும சீதை, திரௌபதி, சநதிரமதி, தமயநதி, சகுநதலை முதலானவாகளும மறறுஞசில ரிஷிபததினிகளும, பாணடியன மனைவியும, தமபாவிடடு வெளளாடடியும, படிததவாகளெனபது விசதயாகததோனறுகிறதே இமமடடோ? தறகாலததிலும தஞசாவூர முதலான நகரஙகளில வசிககிற ராஜஸதிரீகளும படிததவாகளெனபது ஜகபபிரசிததமலலவா?

நாலடியார, காரிகைமுதலிய நூலகள மடடும முனனிலையாகச செயயபபடடிருககினறன ஆதலாலும திருககுறள, நாலடியார காரிகைகாணடம முதலிய நூலகளில பெணகளுககிருககவேணடிய கறபுலக்ஷணம, முதலிய குணஙகள சொலலபபடடிருககினறன ஆதலாலும, புருஷாகளைபபோலபபெணகளும படிபபதறகாகவே அநத நூலகள செயயபபடடனவெனபது திருஷடாநதிரமாயிருககிறது பெணகள படிககககூடாதெனபது மேறபடி கிரநதகாததாகளுடைய சிததாநதமாயிருநதால, அவாகளபெண முனனிலையாகப பாடவும கறபு லக்ஷணஙகளைப பேசவும நிமிததமிலலைபெ ஆசையால நமமுடைய கக்ஷியை ஸதாபிபபதறகு மேறசொனன கிரநதஙகளே பிரததியக்ஷமான செளகபூரவ சாக்ஷிகளாயிருககினறன

ஸ்ரீமதகமபராமாயண பாலகாணடததில, நாடடுபபடலம

பெருநதடஙகண் பிறைநுதலாரக்கெலாம
பொருநது செலவமுங கலவியும பூததலால
வருநதி வநதவாக கீதலும வைகலும
விருநது மனறி விளைவன யாவையே"

எனறு சொலலியிருககிற விருததததைககொணடு கோசலநாடடு ஸதிரீகள படிததவாகளெனபது விளஙகுகிறது. சீவகசிநதாமணி, நாமகளிலமபகததில.

"வணடுமொயததாறறுமணிணடி வாமகுலவடிததநுண ணூல
உணடுவைததனையநீயு முணாவிலாநீளையாகி
விணடுகணணருவிசோர விமமுயிாததுணையையாதல்
ஒண்டொடிதகுவதனறு லொழுகினகவலையெனறான"

எனறு செயபுளான, சசசநதன்மனைவியும, ஜீவகன தாயுமாகிய விஜயை யெனபவள் படிததவளென்று தோனறுகிறது, மேலும, நாலடியாரில.

குஞ்சி யழகுங் கொடுந்தானைக் கோட்டழகும்
மஞ்ச ளழகும் அழகல்ல - நெஞ்சத்து
நல்லம்யா மென்னு நடுவு நிலைமையாற்
கல்வி யழகே யழகு.

என்று சொல்லியிருப்பதால், மயிரழகும் வஸ்திர அழகும், மஞ்சளழகும், அழகல்ல, கல்வியே அழகு என்பது தெளிவாய்த் தோன்றுகிறது. குஞ்சியென்பது ஆண்மயிராதலால், மயிரழகை வேண்டுமானால் புருஷர்களெடுத்துக்கொள்ளட்டும். சேலை கட்டுவதும், மஞ்சள் பூசுவதும், பெண்களுக்குரிய அழகாதலால், அந்த அழகு தங்களுக்குரியதென்று புருஷர்கள் சொல்லத் துணியார்களென்று நம்புகிறோம். ஆகையால், பெண்கள் படிக்கவேண்டுமென்பது மேற்படி நூலாசிரியருடைய கருத்தென்று பட்டப்பகல்போல வெளியாகிறது.

பெண்களுக்குக் கற்பிக்கக்கூடாதென்று ஒரு நூலிலும் விலக்கப்படவில்லை. கணக்கும், எழுத்தும் கண்ணுக்குச் சமானமென்று ஆணுக்கும்பெண்ணுக்கும் பொதுவாய்ப் பலவித்வான்கள் பாடியிருக்கிறார்கள். அப்படியே.

“எண்ணு மெழுத்துங் கண்ணெனத் தகும்,” என்று ஔவையும்
“எண்ணென்ப வேனை யெழுத்தென்ப, விவ்விரண்டும்
கண்ணென்ப வாழு முயிர்க்கு,”

என்று திருவள்ளுவநாயனாரும், சொல்லியிருக்கின்றார்களே. பின்னும்

“கண்ணுடைய ரென்பவர் கற்றோர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர்”

என்ற குறளில் கற்றவர்களே கண்ணுடையவர்கள் கல்லாதவர்கள் முகத்திலிரண்டு புண்ணுடையவர்களென்று திருவள்ளுவநாயனார் ஸ்திரீ புருஷர்களுக்குப் பொதுவாகச் சொல்லுகிறாரேயல்லாமல், புருஷர்களுக்குமட்டும் சொல்லவில்லையே. குருட்டனைச்செந்தாமரைக் கண்ணன் என்பதுபோலும், அஷ்டதரித்திரம்பிடித்தவளை அன்ன பூரணி என்பதுபோலும், படியாத பெண்களுடைய கண்களை நீலோற்பல மென்றும், வண்டென்றும், மானென்றும், மீனென்றும், மற்றவித்வான்கள் எவ்வளவுதான் வர்ணித்தாலும், நாமொருநாளு மொப்பமாட்டோம். புண்ணென்றே சாதிப்போம். ஏனென்றால், திருவள்ளுவ

ருக்கு மற்றப்புலவர்கள் அஜ்ஞாநதிர மல்லவா? கல்வியென்னும் ஔஷதப்பிரயோகஞ் செய்து மேலே சொல்லப்பட்ட புண்களைக் கண்களாக்காதவரையில் நாம் நம்முடைய கக்ஷியைவிடோம். "கற்பு" என்கிற பதத்துக்குக் கல்வியென்று அர்த்தமாகிறபடியால், பெண்களுக்குக் கற்புவேண்டுமானால் கல்வியும்வேண்டுமென்பது அந்தப் பதத்தினாலேயே விளங்குகிறது.

ஸ்திரீயும் புருஷனும் ஒரு தேகமென்பது சர்வசம்மதமானதால் புருஷன்மட்டும் படித்துப் பெண்சாதி படிக்காமலிருப்பது, பாதியுடலிற் பிராணனும் பாதியுடலிற் பிராணனில்லாமலும் செய்கிற பாரிசவாயு போலும் பாதி உடலை அலங்கரித்துப் பாதியுடலை அலங்கரியாமல் விடுவது போலுமிருக்கிறது. இது எவ்வளவு வெட்கக்கேடும் சங்கிலிக் கூத்துமாயிருக்கிறது!

பெண்கள் படித்தால் அவர்களுக்குச் சகலவிவேகமுமுண்டாகுமாகையால், அவர்கள் புருஷர்களுக்கு மந்திரிகளைப்போலச் சமயத்தில் புத்திசொல்வார்கள், காரியஸ்தர்களைப்போலக் கிருத்தியங்களையெல்லாம் நடப்பித்துக்கொள்வார்கள். கணக்கர்களைப்போல வீட்டைச்சேர்ந்த கணக்குகளையெல்லாம் எழுதிக்கொள்வார்கள். தாயைப்போலப் புருஷர்களைச் சம்ரக்ஷிப்பார்கள், காவற்காரரைப்போல வீட்டுப் பண்டங்களையெல்லாங் காத்துக்கொள்வார்கள், நல்ல சுயம்பாகிகளைப்போலப் புருஷர்களுடைய நாவுக்கிதமான பக்ஷணங்களைச்செய்து கொடுத்து உபசரிப்பார்கள். வைத்தியர்களைப்போலப் புருஷர்களுடைய தேகசௌக்கியங்களுக்கடுத்த காரியங்களைத் தேடிச்செய்வார்கள், சங்கீதவித்வான்களைப்போல இன்பமான பதங்களைப் பாடியும், இங்கிதமான வார்த்தைகளைப் பேசியும், புருஷர்களுடைய வருத்தங்களைத் தீர்ப்பார்கள், உத்தம சிநேகிதர்களைப்போலப் புருஷர்களுடைய ஆபத்துக்கு உதவுவார்கள். புருஷர்கள் பிசகிநடந்தால் அவர்களுக்குக் குருவைப்போல உபதேசஞ்செய்வார்கள். பெண்களுக்குப் படிப்பில்லாமையினாலே இவ்வளவு நன்மைகளையும் புருஷர்களிழந்துபோவது எவ்வளவு மதியீனம்! இப்போது பெண்கள்படியாதவர்களாயிருப்பதினாலே புருஷர்கள் தங்களுடைய தொழிலைச் சேர்ந்த வெளிவேலைகளுடனே கூட வீட்டைச்சேர்ந்த காரியங்களையும், வகித்துக்கொண்டு இரண்டு குதிரைகள் கட்டியிழுக்கவேண்டிய வண்டியை ஒருகுதிரைமட்டு மிழுப்பதுபோலத் தாங்கள் சிரமப்பட வேண்டியிருக்கிறது.

பெரிய குடும்பங்களில் அநேக பந்துக்களும், பிள்ளைகளும், வேலைக்காரர்களும் இருக்கிறபடியால் அடிக்கடி கலகங்களும், மனஸ்தாபங்களும் உண்டாகுமே. குடும்பத்தலைவி படியாத அவிவேகசிரோமணியாயிருந்தால், அவள் அந்தக் கலகச் சண்டைகளை நிவர்த்திசெய்யவும், மற்றவர்களுக்குப் புத்திகற்பிக்கவும், எப்படிச்சாத்தியமாகும்? குருடனுக்குக் குருடன் வழிகாட்டவும், முடவனுக்கு முடவன் சிலம்பங் கற்றுக்கொடுக்கவுங் கூடுமா? நிரக்ஷரகுக்ஷியாயிருக்கிற தலைவியானவள் வேலைக்காரர்கள் செய்கிற திருட்டுகளையும், புரட்டுகளையும், மோசங்களையுங் கண்டுபிடித்துப் பொருட்சேதமில்லாமல் குடும்பத்தை எப்படிப் பராமரிக்கக்கூடும்? "மூடன் ஆஸ்திமுழுவதும், நாஸ்தி" என்பதுபோலப் பெண்களுக்குப் படிப்பில்லாமையினால், திரவிய நஷ்டம் சம்பவிக்கவும் இடமுண்டாகின்றது.

பெண்கள் படித்திருந்தால் அவர்கள் வீட்டுவேலைகள்செய்கிற நேரம்போக மற்றநேரங்களில் நல்ல புஸ்தகங்களை வாசித்துத் தங்களுடைய புத்தியை அபிவிர்த்திசெய்யவும், குழந்தைகளுக்குப் படிப்பிக்கவும் தக்கவர்களாயிருப்பார்கள். அப்படியில்லாமையினால் வீதிகளில் வீண்பேச்சும், வம்புவார்த்தைகளும், கோளும், புறணியும் பேசி, துர்ப்பழக்கங்களைக் கற்றுக்கொள்ள இடமுண்டாகிறது. சிறுகுழந்தைகளுக்குத் தகப்பனைவிடத் தாய்மார்களிடத்தில் அதிக பழக்கமிருப்பதினால், பிள்ளையாரைப்பிடித்த சனியன் அரசமரத்தையுங் கூடப்பிடித்ததுபோல படிப்பில்லாத தாய்மார்களுடைய அறியாமையுந் துர்க்குணமும் பிள்ளைகளையுஞ் சாரும்படியாயிருக்கிறது. புருஷர்களைப் பார்க்கிலும் பெண்களுக்கு அதிக அவகாசமான நேரமிருப்பதால் அவர்கள் படித்தவர்களாயிருந்தால், ஔவை முதலானவர்களைப்போல அநேக பிரபந்தங்களையுண்டுபண்ணவும், நூதனமான காரியங்களைக் கண்டுபிடித்துச்செய்யவும், அதனால் இந்தத்தேசம் யூரோப்தேசத்தைப்போலச் சீக்கிரத்தில் நாகரீகம் அடையவும், இடமுண்டாகுமென்பது கரதலாமலகம்போல விளங்கவில்லையா?

பிள்ளைபெற்றவளைப்பார்த்து மலடி பெருமூச்சுவிட்டதுபோல யூரோப்தேசத்து நாகரீகத்தைப்பார்த்து, நாம் பெருமூச்சுவிடவேண்டியதேயல்லாமல் பெண்கள் கல்விகல்லாதவரையில், நம்முடைய தேசம் திருத்தமடையாது, பெண்களுடைய கல்வியினால் புருஷர்க

5

யாதொரு பிறபாடு எநதககாலததிலும ஆக்ஷேபம உணடாகாதபடி திருந்த சாஸனஙகளையும, பட்டையஙகளையும பெறறுககொளளு கிறாகள அவாகள மறறான இறஙகிறவாகளாயிருநதாலும, சநதி ரசூரியாகளும, கலலுமகாவேரியும, புலலும பூமியும உளளவரை யில சொததுகளை அநுபவிககிறதெனறு சஙகேதஞ செயதுகொ ளளுகிறாகள, அநேக வருஷஙகளுககுப பிறபாடு உபயோகமாக வேணடிய பொருளகளை முனனமே சேகரஞ செயதுவைததுக கொளளுகிறாகள

கலியாணததுககு வெகுகாலததுககு முனனமே இனனின மாபபிளளை இனனின பெணணெனறு நிசசிதாாததஞ செயது கொளளுகிறாகள வியாதியிலலாமல திடகாததிராகாயிருககிற வாகளும தஙகளுககு பிறகாலம தஙகளுடைய தனஙகளுக கு இனனாபாததியஸதாகள எனபதையும, தஙகளுடைய காமங களும, தாமஙகளும நடககவேணடிய கிரமததையும விகிதரூபமா கப பதிநதுவைததுககொளளுகிறாகள இவவணணமாகபபினபு நடககவேணடிய விஷயஙகளெலலாம முனனமே ஆலோசிதது நிசசயஞசெயதுக கொளளுகிறவாகள தஙகளுடையபததினிகளை மடடும நினைககிறதிலலை பததினி ஜீவவதியா யிருககுமபொழுது புருஷன யாதொரு வியவஸதையும செயயாமல இறநதுபோனால அவள எனனசெயவாள ? எஙகேபோவாள ? எபபடி ஜீவிபபாள ? அநேக இடஙகளில இறநதுபோன தனவானகளுடைய ஆஸதிக ளை அவாகளுடைய தாயாதி முதலானவாகள கடடிககொணடு அநதததனவானகளுடைய பததினிகளை அநதரததிலவிடுவதை நா மபாாககவிலலையா? கதாசிதது, புததிராகளும, சகோதராகளும, தாயாதிகளும இலலாமல இறநதுபோகிறவனுடைய சொததுககு மடடும பததினிபாததியஸதியாகிறாள அபபடியிலலாமல அபாத தியஸதியாயபபோகிறவளுடைய கதி அதோகதிதானே பெறறதா யககுச சோறுபோடாத பிளளைகளும அநேகா இருககிறாகளே பிளளைகளுடைய நிலைவரமே இபபடியிருககுமபொழுது தாயாதி களுடைய தனமையைச சொலலவும வேணடுமா?

பாகமபிரியாமல ஏகயோகக்ஷேமமாயிருககிற சகோதராக ளில ஒருவன இறநதுபோகிறபக்ஷததில அவனுடைய பாரியையா னவள் கொழுநதனமாாகளிடததிலும அவாகளுடைய பததினிக

ளிடத்திலும் அன்னவஸ்திரத்துக்காகக் கையேந்திக்கொண்டு அவ
ர்கள்செய்கிற சகலகொடுமைகளையும் ஸஹிக்கும்படி சம்பவிக்கு
மபடி சம்பவிக்கின்றது அவள் அந்தக் கொடுமைகளைச் சகிக்க
மாட்டாமல் கொழுந்தனமேல் ஜீவனாம்சவியாஜ்ஜியம் தொடர்ந்
தால் அவள் வியபிசாரியென்றும், தான்விபகதனென்றும், சொத்
துகள் தன்ஸ்வார்ஜிதமென்றும் கொழுந்தனார்வா பத்தமான ஸா
க்ஷிகளைப்பேசி அவளுடைய ஜீவனாம்சத்தைக்கெடுக்க முயற
சி செய்கிறான் அவளப்பிரதப பிரயத்தினஞ்செய்து ஜயபத்திரி
கை பெற்றுக்கொண்டாலும் அது நிறைவேறாதபடி கொழுந்தன
செய்கிற தந்திரங்கள் அநந்தமே நாமகியாயாதிபதியாகையால
நாம சொலவது உண்மையென்பதற்கு நாமே சாக்ஷியாயிருக்கி
றோம்,புருஷனையிழந்து நிர்க்கதியாய்ப்போன ஸ்திரீசகோதரர்கள்
வீட்டுக்குப்போனால் அங்கே அண்ணியார் செய்கிறகொடுமை எண்
ணிமுடியாது நாத்தனாரைக்கண்டால் நாய்போலவிழுகிற அண்ணி
யார்கள் அநேகரிருக்கிறார்கள் "பிக்ஷைபோட்டது போதும் நா
யைப்பிடித்துக்கட்டு" என்பதுபோல அண்ணியாரிடத்தில அரா
நாழிகையிருப்பதைப்பார்க்கிலும மண்ணையள்ளி வாயிலேபோட்
டுக் கொள்ளலாமே இப்படியாக அண்டயிடமில்லாமல அகதியா
யப்போகிற ஸ்திரீ என்னசெய்வாள்? அவள்வேலைசெய்யத் தெரிந்
தவளாயிருந்தால் கைப்பாடு பட்டாயினும் பிழைப்பாள் மரியா
தையுள்ள குடும்பத்தைச் சேர்ந்தஸ்திரீகள் என்னசெய்வார்கள்?
பல்லக்கேறித்திரிந்தவர்கள் பாடுபட அறிவார்களா? பூமுடித்ததலை
புல்லெடுக்க அறியுமா? தங்கவளையிட்டகை சாணந்தட்ட அறியு
மா? தண்டையிட்டகால சகதிமிதிக்க அறியுமா? உசிதமானவலக
கை உலக்கைபிடிக்க அறியுமா? இப்படிப்பட்ட ஸ்திரீகளுக்குச
சிறுபிள்ளைகளும இருந்துவிட்டால அவர்களுடைய கஷ்டத்துக்கு
மட்டும பிரமாணமுண்டா? விதந்துகளில அனேகர் கெட்டுப்போ
வதற்குத் தரித்திரமே முக்கியகாரணமாயிருப்பதால புருஷர்கள்
எப்படியாவது பிரயாசப்பட்டு தங்களுடைய பத்தினிகளுக்குப
பிரத்தியேகமாகப் பொருள்வைக்கவேண்டும - அப்படிச்செய்வது
நாமமுன்னமே விவரித்தபடி சாஸ்திரசம்மதமாயிருக்கின்றது புரு
ஷனமுன்னே யிறந்தால பெண்சாதிக்கும பெண்சாதி முன்னே
யிறந்தால புருஷனுக்கும அந்தச் சௌதாயகம உபயோகமா
குமே

இந்தத்தேசத்தில் விதந்துக்களுடைய ஸ்திதி அதி நிர்ப்பாக்கியமாயும் இரக்கத்துக்குரியதாயும் இருக்கின்றது - விதவையென்கிறபதமே தூஷியமா யிருக்கின்றது ஒருவனைப்பார்த்து மற்றொருவன் "விதவா" என்று சொன்னால் அவனுக்கு ரௌத்திராகாரமாயக் கோபம் ஜனிக்கின்றது ஒருவிதவையைப்பார்த்து "விதவை" என்று சொன்னால் அவளுக்கும் மனஸ்தாபமுண்டாகின்றது - அவள் புருஷனோடுகூடச் சகல சுகங்களையும் இழந்துபோகிறாள் சிவப்புச்சேலை வெள்ளைச் சேலையாகவும் இருகால போஜனம் ஒருகால போஜனமாயும், மயிர்த்தலை மொட்டைத் தலையாயும், சுகமெல்லாந் துக்கமாயும் மாறுகின்றன- அவளுக்கு நகையுமில்லை - தொகையுமில்லை - வகையுமில்லை - அவளுக்கு அலங்காரமில்லை - ஆதிக்க மில்லை யாதொன்று மில்லை "கூலியில்லாவிட்டாலும் வேலைக்குக் குறைவில்லை" என்பதுபோல வீட்டிலுள்ள கஷ்டமான வேலைகளுக்கெல்லாம் அவளே உத்திரவாதியாகிறாள் - கலியாணக்காரர்கள் அவளைக் கண்ணால் பார்க்கக்கூடாதாம் அவள் சந்தோஷங்களுக்கெல்லாம் தள்ளுபடியாகிறாள் துக்கங்களுக்கெல்லாம் சொந்தக்காரியாகிறாள் - தூக்குரிக்கெல்லாம் முறகுறியென்று அவளைவீணே தூஷிப்பார்கள் - ஒருவன்வெளியே போகும்பொழுது விதவை எதிரேவந்தால் துர்நிமித்தமென்று நிர்நிமித்தமாக அவளைக்கோபிக்கிறான் "கைம்பெண்டாட்டியே கழிபட்டஜன்மம்" என்று அவளையாரும் அநியாயமாக இகழுகிறார்கள் "ஊருக்கு இளைத்தவன் பிள்ளையார் கோயிலாண்டி" என்பதுபோலச் சகலப் பிரதிகூலங்களுக்கும் அவளே காரணமென்று சொல்லுகிறார்கள் - குதிரை தூக்குப் போட்டது மல்லாமல் மேலேயேயும் மிதித்ததுபோல கணவனையிழந்து கதியற்று நிற்கிற விதந்துவைச் சகலரும் கூடித் துன்பப்படுத்துவது நாமமல்லவே-பர்த்தா இருக்கமாட்டாமல் பரலோகம் போனால் அதற்குப் பத்தினி என்னசெய்வாள்? ஆகையால் விதந்துக்களைக் கண்ணியமாக நடத்துகிறவர்களே புண்ணிய புருஷர்கள்

ஸ்திரீகள் பட்சத்தில் எழுதத்தொடங்கிய நாம் இன்னும் இரண்டொரு விஷயங்களைப்பற்றி எழுதாமல் விட்டுவிட்டோமானால் இந்த வசன காவியம் குறை யுள்ளதாயிருக்குமாகையால் அந்தவிஷயங்களையும் எடுத்துரைக்க அபேட்சிக்கின்றோம்

பிராமணர்களுக்குள் பெண்வீட்டுக் காரர்கள் புருஷன் வீட்டுக்காரர்களிடத்தில் பெண்ணுக்கு கிரயம் வாங்கிக்கொண்டு பெண்ணைக்கொடுப்பது பெரும்பாலும் வழக்கமாயிருக்கின்றது இது துர்வழக்கமாயும் அசாஸ்திரீயமாயுமிருக்கின்றது எட்டுவகைக் கலியாணங்களில், பிராம்மியம், தெய்வம், ஆரிஷம், பிராஜாபாத்தியம் என்கிற நான்குவகைக் கலியாணங்கள் மட்டும் சாஸ்திரப்படி பிராமணர்களுக்குரியவைகளாயும் மற்ற நான்கு வகைக்கலியாணங்களும் மற்ற வர்ணத்தார்களுக்கு உரியவைகளாயும் இருக்கின்றன புருஷனிடத்தில் யாதொருபொருளும் வாங்காமல் அக்கினி சாக்ஷியாக அவனுக்குக் கன்னிகையைக்கொடுப்பதே பிராமணர்களுக்குரிய ஷை நான்குவகை விவாகங்களின் தாற்பரியமென்று தர்ம சாஸ்திரம் விதிக்கின்றது பொருள்வாங்கிக்கொண்டு பெண்ணைக்கொடுப்பது ஆசுர விவாகமாயும் அதுசாஸ்திரப்படி வைசியர்களுக்கும் சூத்திரர்களுக்கும் மட்டும் உரியதாயும் இருக்கின்றது வைசியர்களும் சூத்திரர்களும் ஆசுரவிவாகம் அக்கிரமமென்று தள்ளிப் பிராம்மிய விவாகம் செய்கிறார்கள் அப்படியிருக்கப்பிராமணர்கள் தங்களுக்குச் சம்பந்தமில்லாத ஆசுரவிவாகத்தைக் கைப்பற்றிக்கொண்டு புருஷன் இனத்தாரிடத்தில் கன்னிசுல்கம் வாங்குவது சுத்த அக்கிரமமாயும் சாஸ்திரவிரோதமாயுமிருக்கின்றது பொருள்வாங்கிக்கொண்டு பெண்கொடுக்கிறவர்களும் கலியாண காலங்களில் கன்னிகாதானத்துக்கு உரிய மந்திரங்களையும் அநுஷ்டானங்களையும் அநுசரிக்கிறார்கள் இது பிரத்தியக்ஷமான மோசமல்லவா? மாம்ஸவிக்கிரயஞ் செய்கிற துர்வழக்கத்தினால் பலதீங்குகள் விளைகின்றன பெண்வீட்டுக்காரர்கள் தங்களுக்கு அதிகப்பணம் வருகிற வழியைப் பார்க்கிறார்களே தவிரப் பெண்ணினுடைய க்ஷேமலாபத்தை எவ்வளவும் யோசிக்கிறதில்லை பரிதானம்வாங்குகிற நியாயாதிபதிகள் யுக்தாயுக்தங்களையும், கிரமாக்கிரமங்களையும் பாராமல் உபயக்ஷிக்காரர்களில் எவன் அதிகப் பொருள் கொடுக்கிறானோ அவன்பக்ஷமாய்த் தீர்மானம் செய்வதுபோலவும், ஒரு சொத்தைத் ஏலங்கூறுகிறவன் யார் அதிகக் கிரயம் கொடுக்கிறார்களோ அவர்களுக்குக்கிரயம் செய்வதுபோலவும் மாம்சவிக்கிரயம் செய்கிறவர்கள் கொள்ளுகிறவனுடைய யோக்கியதையையாவது வயதையாவது அந்தஸ்தையாவது யோசியாமல் எவன் அதிகத்தொகை கொடுக்கிறானோ அவனுக்கே பெண்ணைக் கொடுக்கிறார்கள். ஒருவன் யௌவன புருஷனாயும் குலத்திலும் குணங்களிலும் சிறந்தவனாயு மிருந்தாலும் அவனைப்பார்க்கிலும் ஒரு விருத்தாப்பியன் அதிகப்பணம் கொடுக்கிற பக்ஷத்

இல அவன் அயோககியனுயும ரோகஸதனுயும இருநதாலும அ னுககே பெணணைக கொடுககிறுாகள ௪-௫-௬ வயதுளள பெண ணை அவனுககுத தகபபனுயும பாடடனுயும, சிலவிசை முபபாட டனுயும இருககததகக பிராயமுளள ஒருகிழவனுககுக கொடுககி றுாகள அதிகவயதுளளவாகளும அயோககியாகளுமே அதிகபப ணம கொடுககச சமமதிககிறபடியால அவாகளுககே சிறுபிராய முளள பெணகள கிடைககிறுாகள அககாரணததைபபறறியே "அமமாள தெருளுவதறகுமுன ஐயா உருளுவாா" எனகிற உலகவாககிய முணடாயிருககினறது பிராமணாகளில பெண கள ருதுவாகிற தறகுமுன அவாகளுககு விவாகம செயயபவே ணடுமெனறும விவாகம செயவதறகுமுன ருதுவாகிற ஸதிரீ ஜா திபபிரஷடையெனறும தாமசாஸதிரததில சொலலபபடடிருகக ச சிலா அநதச சாஸதிரததைக கடடித தூரததில எறிநதுவிடடு அதிக வயதுளள பெணகளுககு அதிகபபணம வாஙகுதறகாக, ௧௪-௧௫-வயதுவரையில கலியாணம இலலாமல பெணகளை வைத துககொணடு அவாகளுடைய வயதையும குறைததுச சொலலிக கொணடு பெணகளை ஏலஙகூறிககொணடிருபபதுமனறி பெ ணகள ருதுவாகாதபடி அகாறிகளைககுறிதது அவாகளைச சகல அசௌககியஙகளுககும உடபடுததுகிறுாகள அவாகள தாம ப ணததுககாகக காததிருககிறுாகள ருதுகாலமும அவாகளுககாக க காததிருககுமா? காததிராதாகையால அநேக சமயஙகளில பெணகள கலியாணததிறகுமுன ருதுவாய விடுவாாகள அநத வெடகககேடு வெளியாகாதபடி பகிஷடையான பெணணை அப புறபபடுததாமல வீடடடினேவைததுககொணடு தஙகளுடையவா ளுசாரததைக கொடுககிறுாகள அநேகா சீககிரததில பெண ணைக்கொடுததுப பணமவாஙகுவதறகாக அபபாலலியததில பெ ணகளுககுக கலியாணம செயகிறுாகள - புருஷன எபபடிபபடட வனெனறு பாராமலும, அவனிடததில பெணகள க்ஷேமமாயிருக குமோ அலலதுவருததபபடுமோ எனபதை நினையாமலும தாய தகபபனமாாகள தஙகளுடைய வருமானததைமடடும பெரிதா யெணணிப பெணகளைப பலியிடுவது எவவளவுபெரிய அநியாயம

ஒருவன ஏழையாயிருநதாலும கனனியாசுலககம, கலியா ணசசெலவு முதலியவைகளுககாக சுமாா ௫-௲-வரையில அவ ருககுச செலவாகிறபடியால, அதினுல அவனுடைய குடிமுழுகி

ப போகினறது அபபடிபபட்டவனுககு வாழககைபபடுகிற பெண ணுககு எனனசுகம உணடு? "அஷடதரிததிரம ஆததாள வீடு அதிலும தரிததிரம மாமியாா வீடு" எனபதுபோல புருஷன சௌககியமாயிருநதகாலததில அவனிடததில இராமல எளியதாய் தகபபனமாாகளோடுகூடக கஷடபபடடுகொணடிருநத பெண அவாகளுககுத தனமூலமாக சௌககியம உணடாகுஙகாலததில அவாகளுககுத தனமூலமாக சௌககியம உணடாகுஙகாலததில அவாகளைவிடடுநீஙகி இனிமேல கஷடபபடபபோகிற புருஷனுககு அவள வாழககைபபடுவெது எவவளவு நிாபபாககியம? புருஷன பொனனைககொடுததுப பெணடாடடிககொணடு திணடாடடப பட்டதை நினைததுநினைதது அவளை எபபோதும சீறுமாறுகடடப பிககிறுன அவனுடைய மாமனூ மாமியாா, நாததனூா முதலானவாகளும சமயம வருமபோதெலலாம "அடியே எஙகளுடைய குடியைக கெடுததவாகளே" எனறு சொலலிச சொலலி அவளை ஓயாமல ஏசுகிறுாகள இபபடியாக ஸதிரீகளுககுணடாகிற பல துனபஙகளுககும மாமஸவிகாயமே காரணமாயிருககினறது

பொருளகொடுததுப பெணகொளவதினுல புருஷனுககுணடாகிற கஷடஙகளும அமிதமே உலகததில பணஙகொடுககநிாவாகமிலலாத ஏழைகளே அதிகமா யிருபபதால பிளளையாருககுபபெண அகபபடாமலும அநேக நகரு பெணகிடைககாமல ஆயுசுகாலம முழுமையும பிரமசாரிகளாகவே யிருநது விடுகிறுாகள பிறபாடு ஒருககால அவாகளுககுப பொருள அகபபடமாலும விாததாபபியம மேலிடடு ஸமஸாரததுககுத தகாதவாகளாயப போகிறுாகள அநேகா வீடடை விறறு, நிலததைவிறறு கைப பொருளையெலலாம கலியாணததுககுக கொடுததுவிடடு, சுதத ஏழைகளாயப போகிறுாகள பலபிளளைகளை உடைய ஒருவனதனிகனுயிருநதாலும ஒவவொரு பிளளைககும தனிததனியே பணமகொடுததுக கலியாணம செயவதில அவனுடைய ஆஸதி முழுவதும தோறறுவிடுகிறுன ஒருவனுககு ௬-பெணகள பிறநதால அவன சீமானுகிறுன ஒருவனுககு ௬-ஆணபிளளைகள பிறநதால அவன தரிததிரனுயபபோகிறுன தனவானகளுககுக கனனிகாதானமாயாவது அலலது சொறபப பொருளைவாஙகிககொணடாவது சிலா் பெணகொடுககிறுாகள ஏழைகளிடததில மடடும அதிகப பணம கேடகிறுாகள வீடு, மாடு, நிலமமுதலிய சொததுககளுக

கெலலாம கிரயம நிஷகரிஷிககபபடடிருககினறது கனனியாசுல
கததுககோ கணககிலலை ஒவவொருவனும தனனுடைய இஷ
டபபடி வாய கொணடமடடும பணம கேடகிருன நாளுககுநாள
பெணகளுககுககிரயம அதிகரிதது வருவதாகச சகலரும முறை
யிடுகிருாகள பிரதமதாரம கொளளுகிறவனிடததில வாஙகுகிற
பணததைப பாாககிலும இரணடாநதாரம கொளளுகிறவனிடத
தில அதிகபபணம வாஙகுகிருாகள மூனருந தாரககாரனிடத
தில அதிலும அதிகபபணம வாஙகுகிருாகள இபபடியே தாரம
அதிகரிககப பணமும அதிகரிககினறது

கடைவியாபாரிகள எவவளவு சரககுவேணடுமானாலும கட
னுககுக கொடுககிருாகள பெணவியாபாரிகளோ எனருல மாமஸ
விகரயபபணததைப பூரணமாகக கையிலவாஙகிக கொளளாமல
பெண கொடுககிறதிலலை - கடனபததிரம, பநதகம, பிணைமுதலிய
வைகளை அவாகள அஙகிகரிககிறதேயிலலை நாளைககுப பெண
போய வாழவேணடிய இடம எனபதை யோசியாமல அஸதமொ
ககமாகப பணததைவாஙகிககொணடு தான பிறபாடு பெணணைக
கொடுககிருாகள இவவளவு நிாததாக்ஷிணணியமாகப பெணணு
ககுககிரயம வாஙகுவதறகு நியாயம இனனதெனறு தெரியவில
லை கலியாணம ஆணுககு எபபடி அவசியமோ அபபடியே பெண
ணுககும அவசியநதானே பெணணுககுககிரயம வாஙகுவது நி
யாயமாயிருநதால ஆணுககாகவும பெணவீடடுககாரனிடததில
கிரயமவாஙகுவது நியாயநதானே கலியாணமானது புருஷனைப
பாாககிலும பெணணுககு அககதியமாயும அநியாயமாயு மிருக
கினறது ஏனெனருல புருஷன கலியாணமிலலாமல எபபோதும
பிரமசாரியா யிருநதுவிடலாம பிராமணஸதிரீகள கலியாணம
இலலாமல இருபபது முறையலலவே ஆசையால புருஷாகளெல
லாரும கடடுபபாடு பணணிககொணடு பெணகளுககுக கிரயமே
கொடுககிறதிலலை யெனறு நிராகரணஞ செயதால பெணகளு
டைய தாயததபபனமாாகள பெணகளைவைததுக கொணடு என
ன செயவாாகள? அவாகளே புருஷாகளுடைய காலகளில விழு
நது பெணகளைக கனனிகாதானமாகக கொடுககத துரிதபபடுவா
ாகளலலவா? பிராமணாகளைததவிர வேறெநத ஜாதியிலும எநதத
தேசததிலும மாமஸவிககிரயம செயகிறவழககமே யிலலை மூன
னை நாம தெரிவிததபடி ஆசாரிலககணஙக, உரியவாகளான

வைதியர்களும் சூத்திரர்களுமே அந்தவிவாகத்தை நிஷேதித்துத் தள்ளியிருக்கத் தாங்கள் குலசிரேஷ்டர்களென்று சொல்லிக் கொள்ளுகிற பிராமணர்கள் மற்றஜாதியாரால் நிஷித்தம் செய்யப் பட்ட அந்த அதிகாரத்தை அநுஷ்டிக்கலாமா? புருஷப்பிரஜைப் போல் பெண்ணுக்குத் தகப்பனுடைய ஆஸ்தியில் பாகம் இல்லா மையால் அவளுக்கு ஸ்திரீதனம் கொடுப்பது தேசாசாரமாயும் சாஸ்திரசம்மதமாயுமிருக்க அப்படிச்செய்யாமல் பெண்ணைவிற் றுத் தாய் தகப்பன்மார்கள் பணம் சம்பாதிப்பது நியாயமா? "உ டும்பு வேண்டாம் கையைவிட்டாற்போதும்" என்பதுபோல் அவ ர்கள் ஸ்திரீதனம் கொடாவிட்டாலும் பெண்ணை விக்கிரயப்படுத் தாமல் சும்மாகொடுத்து விட்டாற்போதுமே.

பெண்களுக்கு அதிபால்லியத்தில் கலியாணஞ்செய்கிற ஆசா ரம் துராசாரமாயிருக்கின்றது. ஸ்திரீகளுக்கு விவாகஞ்செய்யத்தக் க பருவம் "எட்டாவது வயது" என்று தருமசாஸ்திரத்தில் சொல் லப்பட்டிருக்க அதற்குவிரோதமாக க-உ-பிராயமுள்ள பெண்களு க்கும் விவாகம் செய்கிறார்கள். அப்படிச் செய்வதினால் தாய்தந் தைகளுக்கு மாமஸ்விக்கிரயப்பணம் சீக்கிரத்தில் கிடைக்கிற பிர யோஜனத்தைத்தவிரப் பெண்ணுக்காவது புருஷனுக்காவது என் னசாதகமிருக்கின்றது? அதனால் உண்டாகிற பாதகமட்டும் பெரி தாயிருக்கின்றது அதனால் உண்டாகிற பாதகமட்டும் பெரிதாயிருக் கின்றது? பால்யபருவமே அம்மைமுதலிய வியாதிகளுக்கு உரிய காலமாகையால் அதிபால்லியத்தின் கலியாணமாகிற பெண்கள் அந்த வியாதிகளுக்கெல்லாம் தப்பியிருப்பார்களென்பது நிச்சயம் அல்லவே. இரண்டுவயதுள்ள பெண்ணை ஒருவன் கலியாணம் செய் தால் பெண் புஷ்பவதியாகிப் புருஷன் வீட்டுக்குப்போகக் குறைந்த பக்ஷம் கஉ-வருஷம் கிரமிக்க வேண்டுமே. அவ்வளவு காலத்திற் குள்ளாகப் பெண்ணுக்கும் புருஷனுக்கும் எவ்வளவோ ஆபத்துக ளும் சம்பத்துகளும் சம்பவிக்கும்படியாயிருக்குமே. அந்த ஆபத் துகளுக்கெல்லாந் தப்பிப் புருஷன்வீட்டுக்குப் பெண்சாதி போனா லும் புருஷன் முதிர்ந்தவயதுள்ளவனாயிருக்கிற பக்ஷத்தில் ஆயுசு விஷயத்திலும் மற்றவிஷயங்களிலும், அவர்கள் ஒருவர்க்கொரு வர் சமானமாயிராமல் கபுமலகனைகையில் அரமபை அகப்பட்ட கதையாய் முடிகின்றதே. இப்படிப்பட்ட அநேக முகாந்தரங்களால் பிராமணர்களுக்குள் வித்நதுகளும் விதுரர்களும் அதிகமாயிருக்கி

ருக்கிறது. சில சமயங்களில் சற்றேறக்குறையச் சமான்வயதுள்ள ஆணுக்கும் பெண்ணுக்கும் கலியாணம் செய்கிறபட்சத்தில் பெண்கள் சீக்கிரத்தில் வளர்ந்து விடுவார்கள், புருஷர்களுக்குப் பக்குவ காலம் வரத்தாமசப் படுகிறபடியால் அது வரையில் ருதுவான பெண்கள் காத்திருக்கும்படி. ஸமயவிக்கிறது

இத்தன்மையான ப்லவிபரீதங்களுக்கு அதிபாலவியவிவாக மேகாரணமாயிருக்கின்றது. பால் குடிக்கிற பிள்ளைகளைப்பிடித்து மணவறையில் வைத்துப்பல அல்ங்காரங்கள் செய்யும்பொழுது அவர்கள் சகிக்கமாட்டாமல் போடுகிற கூக்குரல் ஊரெல்லாம் எதிரொலிபாய்கின்றது. கலியாண ஆரம்பமுதல் முடிவுவரையில் அந்தக்குழந்தைகள் அழுதவண்ணமாயிருக்கின்றன. அழுகையை நிறுத்துவதற்காக அந்தப்பெண் குழந்தைகளைத் தாய்மார்கள் மடியிலவைத்துப் பாலகொடுத்துக்கொண்டு மணவறையிலஉட்காருகிறார்கள். மாப்பிள்ளையும் சிறுபிள்ளையானதால மங்கிலியத்தைத்மணவறையிலிருக்கிற குழந்தைக்குக் கட்டுகிறதென்றும் அதன் தாய்க்குக்கட்டுகிறதென்றும் விவரந்தெரியாமல் சிலசமயங்களில் தாய் கழுத்திலே கட்டிவிடுகின்றது, மாப்பிள்ளை மாமியாருக்குத் தாலி கட்டின அதிசயத்தைப் பார்த்து யாவரும் சிரித்தாலும் அந்தப் பெண்குழந்தைமட்டுஞ்சிரியாமல் அழுதுகொண்டேயிருக்கின்றது. பிள்ளையார் பிடிக்கக்குரங்காய் முடிந்ததைப்போல கலியாண சம்பிரமத்தை, ஆரம்பித்து அழுகைக்குரலாய் முடிவதுவேடிக்கை. அவ்வரி வகையால் அதிகபாலவிய விவாஹம் அநுசிதமாயிருக்கின்

இங்கலீஷ் முதலிய பாஷாந்தர கிரந்தங்கள் புருஷர்களுக்கு ஸ்திரீகள் நடக்கவேண்டிய கிரமங்களையும், அப்படியே ஸ்திரீகளுக்குப் புருஷர்கள் நடக்கவேண்டியகிரமங்களையும் நிஷ்பக்ஷபாதமாக எடுத்துக் காட்டுகின்றன. திராவிடபாஷா ரூபமான கிரந்தங்களோ, புருஷர்களால் செய்யப்பட்டவை வாதலால், அக்கிரந்த வாதலால், அக்கிரந்த கர்த்தாக்கள் புருஷர்கள் விஷயத்தில் ஸ்திரீகள் அநுசரிக்கவேண்டிய விதிகளைமட்டும் நிர்த்தாக்ஷிண்ணியமாகச் சொல்லி ஸ்திரீகள் விஷயத்தில் புருஷர்கள் அவலம்பிக்க வேண்டிய நெறிகளைச் சொல்லாமல், விட்டுவிட்டார்கள். அந்தக் குறையை நிவர்த்திக்கும்பொருட்டு வசனரூபமான இந்தக் கிரந்தத்தை நாம வசனிலாகக் கொண்டு பறப்படவில்லை.

 

# PURANANURU (101 - 125)



With commentary

Edited with explanatory notes



BY

V SWAMINATHAIYAR,
*Tamil Pandit, Presidency College, Madras*

Price 8 Annas

Madras:
PRINTED AT THE VAIJAYANTI PRESS,
*Mount Road.*

1911.

# இப்புத்தகத்திலடங்கியவை.



பக்கம்





கணபதி துணை

# முகவுரை.

புறநானூறென்பது, அமிழ்திற் சிறந்த தமிழ்மொழியதனை ஒ
ரான சுவைபுணர்ந்த தனிப்பால் வளர்த்தருள் நச்சும பெருமை * மூ
சங்கத்துட் கடைச்சங்கப்புலவர்கள் அருளிச்செய்த எட்டுத்தொ
கையுள் ஒன்று, எட்டுத்தொகையாவன நற்றிணை குறுந்தொகை
ஐங்குறுநூறு பதிற்றுப்பத்து பரிபாடல் கலித்தொகை அகநானூறு
புறநானூறு என்பன இதனை அடியில்வரும் வெண்பாவாலுணர்க

"நற்றிணை நல்ல குறுந்தொகை யைங்குறுநூ
றொத்த பதிற்றுப்பத் தோங்கு பரிபாடல்
கற்றறிந்தார் சொல்லுங் கலியோ டகம்புறமென்
றித்திறத்த வெட்டுத் தொகை"

இவற்றுள் ஒவ்வொன்றும் பலரால் செய்யப்பட்டுத் தொழில்
அளவு, பாட்டு, பொருளென்பனவற்றுள் ஒவ்வொன்றால் தொகுக்க
ப்பட்டமையின், இவை தொகையென்று பெயர் பெற்றனவென்பர்

இவற்றுள்,—

க நற்றிணை—இது, கடவுள்வாழ்த்துச் செய்யுள் முதலி
௪0க - அகவற்பாக்களையுடையது, இப்பாக்களுள், முதற்செய்யுள்
கிய கடவுள்வாழ்த்துப் பாரதம்பாடியபெருந்தேவனாராலும், மற்
நானூறுபாக்களும் கபிலர்முதல் ஆலங்குடிவங்கனாரிறுதியாகவுள்
புலவர் பலராலும் இயற்றப்பட்டன, பொருளின்பகுதியாகிய அக
புறமென்னுமிரண்டனுள் அகத்தின்பகுதிகளையே பொருளாகவுடை
பது மேற்கூறிய அகவற்பாக்கள், ஒன்பதடிச்சிறுமையும் பன்
ரண்டடிப்பெருமையுமுள்ளவைகள் இதற்தொகைதொகுப்பித்தோன்
பன்னாடுதந்தபாண்டியன்மாறன்வழுதி இதற்குஉரை கிடைத்தில

உ குறுந்தொகை—இது கடவுள்வாழ்த்துச் செய்யு மு
கிய ௪0உ - அகவற்பாக்களையுடையது இவற்றுள் முதற்
கடவுள் வாழ்த்துப் பாரதம்பாடிய பெருந்தேவனாரால்

* முச்சங்கத்தின் வரலாறுகளை இறையனாரகப்பொருளுரையிலும் புறநானூற்றுரையிலும் காண்க.

# முகவுரை

௪0௧ - பாக்கள் திப்புத்தோளார் முதல் அம்மூவனார் ஈறாகவுள்ள புலவர் இருநூற்று நால்வராலும் இயற்றப்பட்டுள்ளன, அகத்தின்பகுதிகளையே பொருளாகவுடையது. மேற்கூறிய அகவற்பாக்கள் நாலடிச் சிற்றெல்லையும் எட்டடிப் பேரெல்லையும் உள்ளவைகள். இத்தொகைமுடித்தான் பூரிக்கோ. இஃது அளவால் தொகுக்கப்பட்டதென்பர். இத்தொகையின் பாக்களுள் இருபது பாக்களொழிந்த மற்றைப்பாக்களுக்குப் பேராசிரியர் பொருளெழுதினாரென்பதும், அவரெழுதாதொழிந்த இருபதுபாக்களுக்கும் நச்சினார்க்கினியர் பொருளெழுதினாரென்பதும் பின்னுள்ளபாடல்கள் உணர்த்துகின்றன. "பாரத்தொல் காப்பியமும் பத்துப்பாட் டுங்கலியு, மாரக் குறுந்தொகையு ளைஞ்ஞான்கும் - சாரத், திருத்தக்க மாமுனிசெய் சிந்தா மணியும், விருத்திநச்சி னார்க்கினிய மே," "நல்லறிவுடைய தொல்பே ராசான், கல்வியுங் காட்சியுங் காசினி யறியப், பொருடெரி குறுந்தொகை யிருபது பாட்டிற், கிதுபொரு ளென்றவ ரெழுதா தொழிய, விதுபொரு ளென்றதற் கேற்ப வுரைத்தும்', இவை நச்சினார்க்கினியருரைச் சிறப்புப்பாயிரம். "பேராசிரியரும் 'யானே யீண்டை யோனே' என்னுங் குறுந்தொகைச்செய்யுளில் மீனெறி தூண்டி லென்பதனை ஏனையுவமமென்றார்" என்று தொல்காப்பியம், அகத்திணையியல் ௩௯-ம் சூத்திரவுரையில் நச்சினார்க்கினியர் எழுதியிருத்தலாலும் இத்தொகைக்குப் பேராசிரியர் பொருளெழுதினாரென்பது ஊகித்தறியப்படுகின்றது. அவ்வுரை கிடைத்திலது.

௩. ஐங்குறுநூறு — இஃது அகத்தின் பகுதியாகிய மருதமுதலிய ஐந்திணைகளையும் நூறு நூறு அகவற்பாக்களால் விளக்குவது, கடவுள்வாழ்த்துச்செய்யுளுட்பகலிய ௫0௧ அகவற்பாக்களையுடையது, இப்பாக்களுள் கடவுள்வாழ்த்துப் பாரதம்பாடியபெருந்தேவனாராலும், மருதத்திணையைக்குறித்த முதல் நூறு ஓரம்போகியாராலும், நெய்தற்றிணையைக்குறித்த இரண்டாநூறு அம்மூவனாராலும், குறிஞ்சித்திணையைக்குறித்த மூன்றுநூறு கபிலராலும், பாலைத்திணையைக் குறித்த நான்காநூறு ஓதலாந்தையாராலும், முல்லைத்திணையைக் குறித்த ஐந்தாநூறு பேயனாராலும் இயற்றப்பட்டுள்ளன. இதனை அடியில்வரும் வெண்பாவா லுணர்க:

"மருதமோ ரம்போகி நெய்தலம் மூவன்
கருதுங் குறிஞ்சி கபிலர் - கருதிய
பாலையோ தலாந்தை பனிமுல்லை பேயனே
நூலையோ தைங்குறு நூறு"

இதிலுள்ள பாக்களினுடைய அடிகளின் சிறுமைபெருமை தெரியவில்லை. இத்தொகை தொகுத்தார் புலத்துறைமுற்றிய கூடலூர்கிழார்; தொகுப்பித்தான் யானைக்கட்சேய்மாந்தரஞ்சேரலிரும்பொறை. இதற்கு உரை கிடைத்திலது.

௪. பதிற்றுப்பத்து — இது சேரர்குலத்தாரையே பாடியது. இத்தொகையால் அக்காலத்திருந்த சேரர்பலருடைய வள்ளன்மையும் வீரமும் பின்னுமுள்ள வரலாறுகள் பலவும் நன்குபுலப்படும். இஃது, ஒவ்வொருபுலவர் பப்பத்தாகச்செய்த நூறுபாட்டுக்களையுடையது. இதனாலேயே, இத்தொகை பத்துப்பகுதியாகப் பகுக்கப்பட்டுள்ளது. அவற்றுள் முதற்பத்தும் பத்தாம்பத்தும் இப்பொழுது பலவிடத்துப்பிரதிகளிலும் காணப்படாமையால் அவை இறந்தனபோலும். எஞ்சியவற்றுள்,—

இரண்டாம்பத்து, இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனைக் குமட்டூர்க்கண்ணனார்பாடி உம்பற்காட்டு ஐந்நூறூர் பிரமதாயம்பெற்று முப்பத்தெட்டியாண்டு தென்னாட்டுள் வருவதனிற்பாகமும் பெற்றது.

மூன்றாம்பத்து, இமயவரம்பன்றம்பி பல்யானைச்செல்கெழுகுட்டுவனைப் பாலைக்கோதமனார்பாடிச் சுவர்க்கம்பெற்றது.

நான்காம்பத்து, களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரலைக் காப்பியாற்றுக்காப்பியனார்பாடி நாற்பதுநூறாயிரம்பொன் பரிசிலும் அவன் ஆள்வதிற்பாகமும் பெற்றது.

ஐந்தாம்பத்து, கோச்செங்குட்டுவனைப்பரணர்பாடி உம்பற்காட்டு வாரியையும் அவன்மகன் குட்டுவன்சேரலையும் பரிசில்பெற்றது.

ஆறாம்பத்து, ஆடுகோட்பாட்டுச்சேரலாதனைக் காக்கைபாடினியார் நச்செள்ளையார்பாடி ஒன்பதுகாப்பொன்னும் நூறாயிரங்காணமும்பெற்று அவன்பக்கத்து இருத்தல்கொண்டது.

ஏழாம்பத்து, செல்வக்கடுங்கோவாழியாதனைக் கபிலர்பாடி நூறாயிரங்காணமும் அவன் ஒருபெரிய மலைமீதேறிக் கண்டுகொடுத்தநாடும் பரிசில்பெற்றது.

எட்டாம்பத்து, தகடூரெறிந்தபெருஞ்சேரலிரும்பொறையை அரிசில்கிழார்பாடி ஒன்பதுநூறாயிரங்காணம் பரிசில்பெற்றது.

ஒன்பதாம்பத்து, குடக்கோ இளஞ்சேரலிரும்பொறையைப் பெருங்குன்றூர்கிழார்பாடி முப்பத்தீராயிரங்காணமுதலியனபெற்றது.

இந்நூலிலுள்ள பாக்களினுடைய அடிகளின் சிறுமைபெருமை புலப்படவில்லை. இத்தொகையைத் தொகுத்தோரும் தொகுப்பித்தோரும் இன்னாரினாரென்றும் தெரியவில்லை. இதற்கு அரும்பதவுரை ஒன்றுண்டு.

ரு. பரிபாடல் — ஒருவகைப் பாவின் பெயராகிய பரிபாடலென்பது அப்பாவாலாகிய நூலுக்காயிற்று. இஃது, எழுபது பாட்டுக்களையுடையதென்றும், அவ்வெழுபதுள் அ பாட்டு - திருமாலுக்கும் ௩௧ குமரவேளுக்கும் க - கடலுக்கும் ௨௬ வையையாற்றிற்கும் ச - மதுரைக்குமாகப் பகுக்கப்பட்டிருந்தனவென்றும் அடியில் வரும் வெண்பா விளக்குகின்றது.

> "திருமாற் கிருநான்கு செவ்வேட்கு முப்பத்
> தொருபாட்டுக் காமக் காளுக் கொன்று மருவினிய
> வையையிரு பத்தாறு மாமதுரை நான்கென்ப
> செய்யபரி பாடற் றிறம்"

அவ்வெழுபது பாடல்களுள் இப்பொழுது கிடைத்தவை இருபஃதே, மற்றவை பிரதிகளிற் காணப்படவில்லை. இயற்றிய ஆசிரியர்களின்பெயர் அவ்வப்பாட்டுக்களின்பின்னர் எழுதப்பட்டுள்ளன. இந்நூலிலுள்ள பாக்களினுடைய அடிகளின் சிறுமைபெருமை விளங்கவில்லை. இத்தொகையைத் தொகுத்தோரும் தொகுப்பித்தோரும் இன்னாரினாரென்றும் புலப்படவில்லை. இத்தொகை பாட்டாற் குறிக்கப்பட்டது. இதற்குப் பழையவுரையொன்றுள்ளது.

௬. கலித்தொகை — இது கடவுள் வாழ்த்துச் செய்யுள் முதலிய நூற்றைம்பது கலிப்பாக்களையுடையது, அகத்திணைப்பகுதியாகிய பாலை குறிஞ்சி மருதம் முல்லை நெய்தலென்னும் ஐந்திணைக்கும் உரிய முதற்பொருள் கருப்பொருள் உரிப்பொருள்களை இனிது விளக்குவது, சொல்லினிமை பொருளினிமையில் மிகச்சிறந்தது. இதிலுள்ள செய்யுட்கள் பலபுலவரால் செய்யப்பட்டனவென்று பழையவுரைகளைக்கொண்டு ஊகித்தறியப்படுமாயினும், கிடைத்தபிரதிகளில் அவ்வச்செய்யுளின் பின்னர் இயற்றிய ஆசிரியர்களின்பெயர்கள் மற்றைத் தொகைகளிற்போல எழுதப்படாமையின் இயற்றியவர் இன்னாரினாரென்று தெரிந்துகொள்ளக்கூடவில்லை. இந்நூலிலுள்ள பாக்களினுடைய அடிகளின் சிறுமைபெருமையும் விளங்கவில்லை. இதற்கு நச்சினார்க்கினியர் உரைசெய்திருக்கின்றனர். இது குறுங்கலித்தொகையென்றும் கலியென்றும் கூறப்படும். இத்தொகை பாட்டாற் குறிக்கப்பட்டது.

எ. அகநானூறு — இது கடவுள்வாழ்த்துச்செய்யுள் முதலிய சூ0க - அகவற்பாக்களையுடையது. இவற்றுள், பாரதம்பாடியபெருந்தேவனாரால் முதற்செய்யுளாகிய கடவுள்வாழ்த்தும், மாமூலனார் முதல் உலோச்சனாரீறாகவுள்ள புலவர்பலரால் மற்றைநானூறும் இயற்றப்பட்டுள்ளன. அகத்திணைப் பகுதிகளையே பொருளாகவுடையது. மேற்கூறிய அகவற்பாக்கள் பதின்மூன்றடிச் சிறுமையும் முப்பத்தேழடிப் பெருமையுமுள்ளன. இவற்றுள் கடவுள்வாழ்த்தொழிந்த நானூறுபாக்களில் முன்னுள்ள கஉ0 பாக்கள் களிற்றியானைநிரையெனவும், அவற்றின்பின்புள்ள க அ0 - பாக்கள் மணிமிடைபவளமெனவும், மற்றைய நூறுபாக்கள் நித்திலக்கோவையெனவும் கூறப்படும். இத்தொகை தொகுத்தான், மதுரை உப்பூரிகுடிகிழார் மகனாவான் உருத்திரசன்மன்; தொகுப்பித்தான் பாண்டியன் உக்கிரப்பெருவழுதி. இத்தொகை அகமெனவும், அகப்பாட்டெனவும், நெடுந்தொகையெனவும் கூறப்படும். இது பொருளாற் பெருக்கப்பட்டது.

புறநானூற்றின் பாலாற்றிற்கு, அகப்பாக நற்றிணைமுதலிய ஏழு தொகைகளின் வரலாறுகள் இதுவரையிற் கூறப்பட்டன.

அ. புறநானூறு — இது கடவுள்வாழ்த்துச்செய்யுள் முதலிய சூ00 - அகவற்பாக்களையுடையது. அப்பாக்களுள் முதற்செய்யுளாகிய கடவுள்வாழ்த்துப் பாரதம்பாடியபெருந்தேவனாலும், மற்றை கூகக - பாக்களும் முரஞ்சியூர் முடிநாகராயர்முதல் கோவூர்கிழாரீறாகவுள்ள புலவர் பலராலும் இயற்றப்பட்டுள்ளன. இத்தொகை தொகுத்தோரும் தொகுப்பித்தோரும் இன்னாரின்னாரென்று விளங்கவில்லை. இதிலுள்ள பாக்களினுடைய அடிகளின் சிறுமை பெருமையும் தெரியவில்லை. இது புறப்பாட்டெனவும், புறமெனவும் வழங்கும். இது பொருளாற் பெருக்கப்பட்டது. இங்கே பொருளென்றது, அகம் புறமென்னுமிரண்டனுள் புறத்தை.

அகமாவது ஒத்த அன்பினராகிய தலைவனும் தலைவியும் தம்முட்கூடுகின்றகாலத்துப் பிறந்து அக்கூட்டத்தின்பின்பு அவ்விருவராலும் ஒருவருக்கொருவர் தத்தமக்குப்புலனாக இவ்வாறிருந்ததெனக் கூறப்படாததாய் எப்பொழுதும் உள்ளத்துணர்வாலேயே அனுபவிக்கப்படும் இன்பம். இன்பமாகிய அகத்தேநிகழும் ஒழுக்கத்தை அகமென்றது ஆகுபெயர். அகம் உள். புறமாவது மேற்கூறிய ஒத்த அன்புடையார் தாமேயன்றி எல்லாராலும் அனுபவித்துணரப்பட்டு இஃது இவ்வாறிருந்ததெனப் பிறர்க்குக் கூறப்படும் பொருள்

அஃது அறனும பொருளும, அறனும பொருளுமபறறிப புறததே நிகழு மொழுககததைப புறமெனறது ஆகுபெயா, புறம - வெளி

இநநூல, மேறகூறிய புறததினபகுதியாகிய வெடசி முதலிய திணைகளுககுரிய துறைபபொருளமைநத ௪00 - பாககளையுடைமை யின புறநானூறெனறு பெயா பெறறது வெடசிமுதலிய திணை களாவன —வெடசி, கரநதை, வஞசி, காஞசி, நொசசி, உழிஞை, துமபை, வாகை, பாடாண, பொதுவியல, கைககிளை, பெருநதிணை யெனபன திணை - ஒழுககம துறை - மககளும விலஙகுகளமுதலி யனவும செனறு நீருணணுந துறைபோலப பலவகைபபடடபொரு ளும ஒருவகைபபடடு இயஙகுதறகுரிய வழி இநதபபகுதியிலுளள திணை துறைகளின விவரணஙகளைப பினனாசசோககபபடடுளள திணைவிளககததிலும துறைவிளககததிலும முறையே காணக

இநநூலால, பணடைககாலததுஇததமிழநாடடிலிருநத சேர சோழபாணடியாகளாகிய முடியுடைவேநதா, சிறறரசா, அமைசசா, சேனைததலைவா, வீரரெனகிற பலருடைய சரிததிரஙகளும, கடை யெழுவளளலகளின சரிததிரஙகளும, கடைசசஙகபபுலவருடைய சரிததிரஙகளும, அககாலததுளளாருடைய நடைமுதலியனவும பின னுமபறபலவும நனகுபுலபபடும இநநூறசெயயுடகளாறபாடபபடட வாகள ஒருகாலததாரலலா, ஒருகுலததாரலலா, ஒருசாதியாரலலா, ஓரிடததாருமலலா பாடியவாகளும இததனைமையரே இவாகளில அநதணா சிலா, அரசா பலா, வணிகா பலா, வேளாளா பலா பாடிய வாகளுள பெணபாலாருமுளளா

முனனொரிடையே யிநநா டாணட, காவலா பலரோ பாவலா பலரோ, மாசறு கததை யாசற விளககிச, சொறசுவை பொருட சுவை துவனறியெனு ஞானறு, மொபபுமை யிலலாத திபபிய நடை யுடைத, திறபபா டமைநதவிப புறபபாட டுககள, தெயவ வணககஞ செயயுமி னெனபவும, அறததின பகுதியை உறததெரிப பனவும், பாவ வழியை நீவனன றெனபவும், இமமைப பயனொடு மறுமைப பயனைச, செமமையின வகுததுத தெரிவிப பனவும், அநதண ரியல பைத தெரிநதுரைப பனவும், அரச நீதியை யுரைசெய வனவும், வணிக ரியலபைத துணிவுறுப பனவும், வேளாண மாககளின றாளாண மை யினை, யியமபு வனவும வயமபுரி போாககு, முநதுறு மாசனைச சநது செய வனவும், ஒறறுமைப பயனைச சொறறிடு வனவும், வீரச சிற பபை யாரத தெரிபபனவும், இலலறு மாகிய நலலற முறைபபவுந, துற

வற மதஙகளைத திறவிதிற றெரிபபவு, மிடிததுன பததை யெடுததுரைப
பனவும, வணமையுந தணமையு முணமையுந திணமையு, மெனனு
மிவறறைப பனனு வனவும, அளியையு மொளியையுந தெளிவுறுப
பனவுந, தமமைப புரநதோா தாமாயந திடவே, புலவாகள புலமபி
யலமா றெரிபபவு, நடபின பயனை நனகியமபுநவுந, கலவிப பயனைக
கடடுரைப பனவும, நீாநிலை பெருகமென நிகழததுவனவு, மானந
தனனைத தாஙகைக குறைபபவும, இளமையும யாககையும வளமையு
நிலையா, வெனறே யிசைததுநனறேயப பனவும அருளுடைமை
யினை மருளறத தெரிபபவுந, தாமறிநதொழுகென றுரனுற விதிபப
வும, அவாவின கேடே தவாவின பெனபவும, இனியவை கூற னனி
நல லெனபவும, உழவின பெருமையை யழகுற வுரைபபவு, நனறி
யறிக வெனறிசைப பனவுந, கொடுஙகோன மையினை விடுஙகோ
ளெனபவுந, தவததின பெருமையைத தரபபகா வனவு, மடியெனும
பிணியைக கடிமி னெனபவுந, கொலையெனும பகையைத தொலைமி
னெனபவும, நலலோாப புணாநது புலலோாத தணநது, தாழவொன
றினறி வாழமி னெனபவுஞ, சுறறம புரககு நறறிற முறைபபவுந, கற
பின றிறததைக கறபிப பனவு, மககட பேறறின மாணபுரைப பன
வுந, கணவனை யிழநத மணமலி கூநத, றீபபாய செயதி தெரிவிப
பனவுந, கைமமை விரத வெமமை விரிபபவும, இனனும பறபல
பனனு வனவுமாயச, செபபுந ரெவாககு மெயபபிடை வைபபாய,
அருமபெறன மாபிற பெருமபயன றருமே - எனறு ஒருவாறு பொ
துபபடத தொகுததுககூறுவதனறி இனனபாடல இததனமையது
இனனபாடல இததனமையதெனறு தனிததனியே எடுததுககாடடி
இவறறின அருமை பெருமைகளைச சீராடடிப பாராடடுதறகு ஒரு
சிறிதும வலலேனலலேன

இவை நூலாசிரியா பலருடைய உளளததையும உரையாசிரியா
பலருடைய உளளததையும தமவசமாககி அவறறைத தமககு முழு
மணிபபீடிகையாகக கொணடு வீறறிருநதன வெனபதை, அவாவ
ருளிசசெயத நூலகளும உரைகளும இவறறின சொனனடை பொரு
ணடைகளை இடையிடையே பெருமபாலுந தழுவியிருததலே நனகு
புலபபடுததும

இநநூறறுககிடைததவுரை, பதபபொருளை இனிதுவிளககி உரிய
இடஙகளிற சொறகளைமுடிததுககாடடி இலககணககுறிபபையும
திணை துறைகளையும ஆஙகாஙகுளள பழமொழிகளையும அணியையும
சொனனயம பொருணயஙகளையும நனகுபுலபபடுததுவது, இவ

# முகவுரை.

வுரை, இந்நூலின் முதல் இருநூற்றறுபத்தாறு பாட்டுகளுக்குமட்டுமே கிடைத்தது, மேலுள்ள பாட்டுகளுக்கு ஒருபிரதியிலும் கிடைத்திலது; இவ்வுரையாசிரியர் இன்னாரென்று தெரியவில்லை இவர் சில பாட்டுகளின் விசேடவுரையில் எழுதும் மறுப்புக்கள், இந்நூற்குப் பழையவுரை ஒன்றிருந்ததென்பதைக் குறிப்பிக்கின்றன அவ்வுரை இப்பொழுது கிடைக்கவில்லை

இந்நூற்கு இலக்கணம் அகத்தியமும் தொல்காப்பியமுமே யென்பதும், இதில் ஒவ்வொருபாட்டின் பின்னும் எழுதப்பட்டுள்ள திணையுந்துறையும் அவ்வப்பாட்டிற்கு ஏற்றன வல்லவென்பதும் நச்சினார்க்கினியர் கருத்து, அவர் கருத்து அன்னதாதல், 'தத்தம் புதுநூல் வழிகளாற் புறநானூற்றிற்குத் துறைகூறினாரேனும் அகத்தியமும் தொல்காப்பியமுமே தொகைகளுக்கு நூலாகலின் அவர் சூத்திரப் பொருளாகத் துறைகூறவேண்டுமென்றறிக' என்று தொல்காப்பியப்புறத்திணையியலில் "கொடிப்போ ரேத்தி" என்னுஞ் சூத்திரவுரையில் அவரெழுதியிருத்தலாலும், மேற்கூறிய புறத்திணையியலுரையில் இந்நூற்பாட்டுக்களுட் சிலவற்றை வேறு திணைதுறைகளுக்கு உதாரணமாகக்காட்டி அவர் மறுத்தலாலும் துணியப்படும்

இத்தமிழ்நாட்டின் பழையசரித்திரங்களைத் தெரிந்துகொள்ளுதலிலும் தெரிவித்தலிலுமே பெரும்பாலும் காலங்கழித்து உழைத்து வரும் உபகாரிகளாகிய விவேகிகள், இந்நூலை நன்கு ஆராய்ச்சிசெய்வார்களாயின் இதனால் பலவரலாறுகள் முதலியன தெரிந்துகொள்ளுதல் கூடும்

இந்நூலுரையாசிரியர் மேற்கோளாக எடுத்துக்காட்டிய நூல்கள் –

இலக்கணம் — தொல்காப்பியம்

இலக்கியம் — க. கலித்தொகை. உ. குறுந்தொகை. ந. சீவகசிந்தாமணி. ச. பெரும்பாணாற்றுப்படை

நூதனமாக எழுதிய இந்நூலுரைக்குறிப்பில், மறதி முதலியவற்றால் எழுதவேண்டியவைகள் எழுதப்படாமலும் வேண்டாதவைகள் எழுதப்பட்டும் இருத்தல்கூடும், விவேகிகள் இக்குற்றத்தைப் பொறுப்பார்களென்று நம்புகிறேன்

சில இடையூறுகளால் இப்பகுதியைக் குறித்தகாலத்தில் வெளிப்படுத்தக் கூடாமற் போயிற்று

இங்ஙனம்
வே. சாமிநாதையன்.
(1911)

# பாடினோர் வரலாறு

[புறநானூற்றில க0க - முதல கஉரு - இறுதியாகிய செயயுடகளைப பாடிய ஆசிரியாகள வரலாறு —]

**ஔவையார்.**—இவா அதிகமானெடுமானஞ்சியிடம அமுதமயமாகிய நெலலிககனிபெறறு அவனைப புகழநதாா, இஃது, இநநூல சக - மபாட்டினாலும், க00 - ம திருககுறளின விசேடவுரையில 'இனியகனிசளெனறது ஔவையுணட நெலலிககனிபோல அமிழதாவனவறறை' எனறு பரிமேலழக ரெழுதியதனாலும வெளியாகினறது இவராறபாடடபபடடோா அதிகமா னெடுமானஞ்சி, அதிகமான்மகன் பொதுட்டெழினி, தொண்டைமான், நாஞ்சில்வளளுவன, சேரமான்மாவெண்கோ, பாண்டியன்கானபபேர்தந்த உக்கிரபபெருவழுதி, சோழன் இராசசூயம்வேட்ட பெருநற்கிள்ளி யென பாா இனனும இவரியறறிய பாடலகள நறறிணையிலும குறுந்தொகையிலும அகநானூறறிலும தொல்காபபியவுரையிலும யாபபருங்கலவிருததியுரை முதலியவறறிலும காணபபடுகினறன ஆததிசூடி, கொனறைவேநதன, மூதுரை, நலவழி, அசதிககோவை முதலியன இவரால இயறறபபடட நூல கள இவா அவவசசமயததுச செயதனவாக உளள தனிபபாடலகள மிகப பல இவாபெயா ஔவையெனவும வழஙகும இவரியறறிய செயயுளி னெண கள க0க, க0உ, க0௩, க0ச

**கபிலர்.**—இவா அநதணா, வேளபாரியின நணபா, அவன இறந்த பினபு அவனமகளிரை அழைததுசசெனறு மணஞ்செயதுகொளளுமபடி விச்சிக்கோன், இருங்கோவேளெனபவாகளை வேணடி அவாகளமறுததது கணடு வெறுததுப பினபு அமமகளிரைப பாாபபாாபபடுத்துத தமகடனைக கழிததனா, இதனை, இநநூல உ00-ம செயயுள முதலியவறறாலுணாக எட டுததொகையுள ஒனறாகிய ஐங்குறுநூற்றில் குறிஞசியைபபொருளாகவுடைய மூனறுமநூறு இயறறியவா இவரே, இதனை, "மருதமோ ரமபோகி நெய தலம மூவன, கருதுங குறிஞசி கபிலா" எனனும பழையவெணபாவாலுண ாக அவவெடடுததொகையுள ஒனறாகிய பதிற்றுப்பத்தில எழாமபததைப பாடிச சேரமான செலவககடுஙகோ வாழியாதனிடம நூறாயிரஙகாணமும அவன ஒரு மலைமீதேறிக கணடு கொடுதத நாடும பரிசிலாகபபெறறனா, இஃது அபபதிறறுபபததுரையாற புலபபடுகினறது இனனும இவரியற றியபாடலகள நறறிணையிலும குறுந்தொகையிலும அகநானூறறிலும காணப படுகினறன பததுபபாட்டினுளொனறாகிய பெருஙகுறிஞசி எனறு வழங கும குறிஞ்சிப்பாட்டும், பதினெணகீழககணககினுள ஒனறாகிய இன்னாநாற் பதும் இவாருளிசசெயதனவே. இலககணவுரைகளில 'கபிலபரணா' எனறு உரையாசிரியாகள உதாரணஙகாட்டியிருபபதை உறறுநோக்குமிடதது, இவா பரணாபால மிக்கநேயமுடையவரெனறும பெருமபாலும அவருடனிருபபவ

றென்றும் சொல்லுதற்கிடமுண்டு. இவரால் பாடப்பட்டோர் (சேரமான் கடுங்கோவாழியாதன்)—சேரமான் செல்வக்கடுங்கோவாழியாதன், வேள் பாரி, அதுதை, மலையமான் திருமுடிக்காரி, வையாவிக்கோப்பெரும்பேகன், விச்சிக்கோன், இருங்கோவேளென்பார். இவர் அவ்வச்சமயத்திற் கூறிய பாடல்கள் மிகவும் வியக்கத்தக்கவை. இந்நூலில் (௫௩-ம் பாடல்) "வெறுத்த கேள்வி விளங்குபுகழ்க் கபிலன்" என்பு பொருந்திலிளங்கீரனாராலும், (௧௨௬-ம் பாடல்) "புலனழுக் கற்ற அந்தணாளன்", (௧௭௪-ம் பாடல்) "பொய்யா நாவிற் கபிலன்" என மாறோக்கத்து நப்பசலையாராலும் இவர் புகழப்பட்டிருக்கின்றனர். திருவள்ளுவமாலையிலுள்ள "தினையளவு போதா" என்னும் ௫-ம் பாடல் இவரால் செய்யப்பட்டதாகத் தெரிகின்றமையின், கடைச்சங்கத்திருந்து தமிழாராய்ந்தோராகிய நல்லிசைப்புலவர் நாற்பத்தொன்பதின்மருள் ஒருவரென்றும் திருவள்ளுவர் காலத்தினரென்றுங் கூறப்படுவர். இவர் வேறு, தொல்கபிலரென்பார் வேறு. இவரியற்றிய பாடல்களின் எண்கள் - ௧௦௫, ௧௦௬, ௧௦௭, ௧௦௮, ௧௦௯, ௧௧௦, ௧௧௧, ௧௧௩, ௧௧௪, ௧௧௫, ௧௧௬, ௧௧௭, ௧௧௮, ௧௨௦, ௧௨௧, ௧௨௨, ௧௨௩, ௧௨௪

**பாரிமகளிர்**—இவர்கள் பாரியென்னும் வள்ளலுடைய புதல்வியர். இவர்களுள் ஒருத்தி மழையில்லாத வறட்காலத்தில் இரந்துவந்த பாணனொருவனை உண்பித்தற்குச் சோறுபெறாமையாற் பொன்னை உலையிற்பெய்து சோறாக்கிக்கொடுத்தனள். இது, பழமொழியில் "மாரியொன் றின்றி வறந்திருந்த காலத்துப், பாரி மடமகள் பாண்மகற்கு நீருலையுட், பொன்றந்து கொண்டு புகாவாக நல்கினாள், ஒன்றுறா முன்றிலோ வில்" என்னும் ௧௭௧-ம் வெண்பாவால் விளங்குகின்றது. இவர்கள் தமது தந்தை யிறந்த பின்பு பிரிவாற்றாது வருந்திப் புலம்பிப் பாடினர். அப்பால் தமது தந்தையின் தோழராகிய கபிலரால் பார்ப்பார்க்கு மணஞ்செய்துகொடுக்கப்பட்டார்கள். இவர்களியற்றிய பாடலின் எண், ௧௧௨.

**வடமவண்ணக்கன் பெருஞ்சாத்தனார்**—இவரால் பாடப்பட்டோன் தேர்வண்மலையன். இவர்பெயர் வடவண்ணக்கன் பெருஞ்சாத்தனென்றும் கையெழுத்துப் பிரதிகளிற் காணப்படுகின்றது. இவரியற்றிய பாடலின் எண், ௧௨௫.

# பாடப்பட்டோர் வரலாறு.

[புறநானூற்றில் க0க - முதல் க௨௫ - இறுதியாகிய செய்யுட்களில் வந்துள்ள அரசர்முதலியோர் வரலாறு —]

**அதிகமான்நெடுமானஞ்சி** —இவன் கடையெழுவள்ளல்களிலொருவன், யுத்தத்திற் போர்பெற்றவீரன் ஒருவகைவீரர்களாகிய மழவர்களுக்குத் தலைவன், ஒருகாலத்தில், உண்டோர்க்கு நெடுங்காலஞ்சீவித்திருத்தலைச்செய்யும் கருநெல்லிப்பழத்தைப்பெற்று அதனை ஒளவைக்குக்கொடுத்துப் புகழ்பெற்றவன், காஞ்சிநகரத்திருந்த தொண்டைமானென்னுமரசனிடம் ஒளவையைத் தூதுவிடுத்தோன், சேரமானுடைய உறவினன், பனைமாலையையுடையவன், வெட்சிப்பூவையும் வேங்கைப்பூவையுமணிவோன், சேரன் சோழன், திதியன், எருமையூரன், இருங்கோவேண்மான், பாண்டியன், பொருநன் என்னும் அரசரெழுவர்க்குரிய எழிலாஞ்சனையும் நாடும் அரசவுரிமையுமாகிய இவற்றையுடையோன் மேற்கூறிய அரசரெழுவரோடு பகைத்து மேற்சென்று அவரைப் போரில்வென்றோன், பரணர்புகழ்ந்துபாடும்படி கோவலூரையும்வென்றோன் இவனுடையவூர் தகடூர் இவன்மலை குதிரைமலை இவன்மகன் பொகுட்டெழினி, இவன்முன்னோர், தேவர்களைப்போற்றிவழிபட்டு விண்ணுலகிலிருந்து கரும்பை இவ்வுலகிற் கொணர்ந்தனர் இவன் பெயர் அதியமானெனவும், அதியமானெடுமானஞ்சியெனவும், நெடுமானஞ்சியெனவும், அஞ்சியெனவும் வழங்கும் இவன் சேரமான் பெருஞ்சேரலிரும்பொறையால் வெல்லப்பட்டானென்று பதிற்றுப்பத்துள் எட்டாம்பத்தினால் விளங்குகின்றது 'ஒருவன்மேற்சென்றுழி ஒருவன் எதிர்செல்லாது தன் மதிற்புறத்து வருந்துணையுமிருப்பின் அஃது உழிஞையின்பாற்படும், அது சேரமான்செல்வுழித் தகடூரிடை அதிகமானிருந்ததாம்' என்பது தொல்காப்பியம், புறத்திணையியல், ௭-ம் சூத்திரம் நச்சினார்க்கினியருரை இவனைப்பாடியபுலவர்கள் ஒளவையார், பரணர், பெருஞ்சித்திரனார், பொன்முடியார் செய்யுளினெண் - க0க, க0௩, க0௪

**அதிகமான்மகன்பொகுட்டெழினி** —இவன், கொடையும் இன்பச்சிறப்பும் வென்றிச்சிறப்புமுடையோன், இவன்பெயர் அதியமான்நெடுமானஞ்சி மகன்பொகுட்டெழினியெனவும் வழங்கும், இவனைப்பாடியவர் ஒளவையார் க0௨

**சேரமான்மாந்தரஞ்சேரலிரும்பொறை** —இவன் சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியோடு போர்செய்தான் இவன்காலத்துப்புலவர்கள் பொருந்திலிளங்கீரனார், வடவண்ணக்கன்பெருஞ்சாத்தனார் க௨௫

**சோழன்இராசசூயம்வேட்டபெருநற்கிள்ளி** —இவன் யுத்தத்தில் வல்லவன், தேர்வண்மலையனென்பவனைத் துணையாகக்கொண்டு சேரமான் மாந்தரஞ்சேரலிரும்பொறையோடு பொருது அவனை வென்றான் சேரமான் மாவெண்கோவோடும் பாண்டியன் கானப்பேர்தந்த உக்கிரப்பெருவழுதியோடும் நட்புடையோன் இவனைப் பாடிய புலவர்கள் பாண்டரங்கண்ணனார், ஒளவையார், உலோச்சனார் இவன்காலத்துப் புலவர் வடவண்ணக்கன் பெருஞ்சாத்தனார் க௨௫

**தேர்வண்மலையன்** —இவன் சிறந்தவீரன், சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளிக்குத் துணையாய் நின்று சேரமான் மாந்தரஞ்சேரலிரும்பொறையை வென்றான் இவனைப்பாடிய புலவர் வடமவண்ணக்கன் பெருஞ்சாத்தனார் ௧௨௫

**மலையமான்திருமுடிக்காரி** —இவன் பெண்ணையாற்றங் கரையிலுள்ள மலாடென்று வழங்கும் மலையமானாட்டின் அரசன் கோவலூர் இவனது இராசதானி தமிழ்நாட்டரசர் மூவர்க்கும் ஒவ்வொருசமயத்து யுத்தத்திலுதவி புரிந்தவன், புலவர்க்குப் பரமோபகாரி, முள்ளூர் மலையை யுடையான் அந்தணர்க்கு நிலங்கொடுத்தோன் கடையெழுவள்ளல்களிலொருவனென்று கூறப்படும் மலையனிவனே இவன்குதிரைக்குக் காரி யென்று பெயர் கடையெழுவள்ளல்களிலொருவனாகிய ஓரியென்பவனோடு போர்செய்தவன், இதனை, [அடி ௧௧௦ ௧௧௧] "காரிக் குதிரைக் காரியொடு மலைந்த, வோரிக் குதிரை யோரியும்" என்னும் சிறுபாணாற்றுப்படையா லுணர்க இன்னும், "துஞ்சா முழவிற் கோவற் கோமான், நெடுந்தேர்க் காரி கொடுங்கான் முன்றுறைப், பெண்ணையம் பேரியாற்று நுண்ணறல் கடுக்கு,நெறியிருங் கதுப்பினென் பேதைக்கு" எனவும், "முரண்கொடுபெய்ற செவ்வேன் மலையன், முள்ளூர்க் கானம்" எனவும், "ஓடா மலையன் வேலிற், கடிதின் மின்னுமிக் கார்" எனவும், "ஆரியர் துவன்றிய பேரிசை முள்ளூர்ப், பலருடன் கழித்தவாண் மலையன் றொருவேற், கோடியாங்கு" எனவும் அகநானூறு முதலியவற்றிற் சான்றோர் இவனைப்பாராட்டியிருத்தல்காண்க இவன்பெயர் மலையமானெனவும், காரியெனவும், மலையனெனவும் வழங்கும் இவனைப்பாடியபுலவர்கள் —கபிலர், மாறோக்கத்து நப்பசலையார் ௧௨௧, ௧௨௨, ௧௨௩, ௧௨௪

**வேள்பாரி** — இவன் கடையெழுவள்ளல்களிலொருவன், முந்நூறூரையுடைய பறம்புநாட்டிற்கும் பறம்புமலைக்கும் தலைவன் முல்லைக்கொடிக்குத் தேர்கொடுத்தோன், இதனை, [அடி ௮௯ ௯௧] "சிறுவீ முல்லைக்குப் பெருந்தேர் நல்கிய, பிறங்குவெள் ளருவி வீழுஞ் சாரற், பறம்பிற் கோமான் பாரி" என்னும் சிறுபாணாற்றுப்படையா லுணர்க தன்னுடைய முந்நூறூரையும் மற்றைப் பொருள்க ளெல்லாவற்றையும் பரிசிலர்க்குக்கொடுத்தோன், மிக்க பராக்கிரமமுடையவன் இவனைவெல்லக்கருதிய தமிழ்நாட்டு வேந்தர்மூவரும் போரில் வெல்லவொண்ணாமையின் வஞ்சித்துக்கொன்றனர் இவன் இறந்தபின்பு இவனண்பராகிய கபிலர் சென்று இவன்மகளிரை மணஞ்செய்துகொள்ளும்படி விச்சிக்கோனையும், இருங்கோவேளையும் வேண்டி, அவர்மறுப்ப, அப்பால் அம்மகளிரைப் பார்ப்பார்க்கு மணம்புரிவித்தனர் இவனைப்பற்றிப் பலவாறாக அவ்வச்சமயங்களிற் கபிலர்பாடிய செய்யுட்களை யுன்றிப் படிப்பின் யாரும் மனமுருகாதிரார் சைவசமயாசாரியருள் ஒருவராகிய ஸ்ரீசுந்தரமூர்த்திநாயனார் 'கொடுக்கிலாதானைப் பாரியே யென்று கூறினுங்கொடுப்பா ரிலை" என்று அருளிச்செய்திருத்தலின், இவன் காலம் அவர், காலத்துக்கு முந்தியதாகல்வேண்டும் இவன் மலைச்சுனை, புலவர் பலராலும் புகழப்பட்டுள்ளது, இவன்பெயர் பாரியெனவும்வழங்கும் இவன் இறந்தபின்பும் இருந்த புலவர் புறத்திணைநன்னாகனார் ௧௦௫, ௧௦௬, ௧௦௭, ௧௦௮, ௧௦௯, ௧௧௧, ௧௧௫, ௧௧௬, ௧௧௭, ௧௧௮, ௧௧௯, ௧௨௦

# புறநானூறு

## மூலமும் உரையும்.

(௧0௧ - ௧௨௫)

(௧0௧) ஒருநாட செலலல மிருநாட செலலலம
பலநாள பயினறு பலரொடு செலவினுங
தலைநாள போனற விருபபினன மாதோ
வணிபூ ணணிநத யானை யியறேற
ரதிகமான பரிசில பெறூஉங காலம
நீடடினு நீடடா தாயினும யானைதன
கோடடிடை வைதத கவளம போலக
கையகத ததுவது பொயயா காதே
யருநதே மாநத நெஞசம
வருநத வேணடா வாழகவன றாளே

**திணை - பாடாண்டிணை, துறை - பரிசில்கடாநிலை**

**அதிகமானை ஔவையார் பாடியது**

இதனபொருள் —ஒரு நாள செலலலம யாம ஒரு நாள செலலேம், இரு நாள செலலலம - இரணடுநாளசெலலேம, பல நாள பயினறு பலரொடு செல வினும - பலநாளும நெருஙகிப பலரோடுகூடச செலவேமாயினும, தலை நாள போனற விருபபினன - முதறசெனறநாளபோனற விருபபததையுடையன, அணி பூண அணிநத யானை - அணிகலமணிநத யானையையும, இயல தேர - இயனற தேரையுமுடைய, அதிகமான—, பரிசில பெறூஉம காலம - பரிசி லைப பெறுங காலமானது, நீடடினும நீடடாதாயினும - நீடடிபபினும் நீடடி யாதொழியினும, யானை தன கோடு இடை வைதத கவளம போல - யானை யானது தனனுடைய கொமபினிடததே வைக்கபபடட கவளததைபபோல, கை அகததது அது நமது கையகதததது அபபரிசில, பொயயாகாது - அது தபபாது, அருநத எமாநத நெஞசம - உணண ஆசைபபடட நெஞசே! வரு நத வேணடா - நீ பரிசிறகு வருநதவேணடா, அவன தாள வாழக - அவனு டைய தாள வாழவதாக — எனறவாறு

அதிகமானவிருபபினனென முனனேகூடடுக கோடடிடைவைததகவ ளமபோலவெனறதறகு யானை வாயிற்கொணடு துகருமளவும கோடடிடை வைத்தகவளமபோலப பரிசில கையகதததுவெனக, அனறிக களிறு கோட

டிடைவைத்தக்கவளந்தைச் சிறிதுதாழத்ததாயினும் அஃது அந்நறுத்தப்பாத வாறுபோலப் பரிசில் சிறிது தாழப்பினும் நமக்குத்தருதல் தப்பாதெனப் தாக்கி உரைப்பினு மமையும்

தானே முயற்சியென்பாரும் உளர் அருநதவெனபது, அருநதெனக் கடைக்குறைக்கப்பட்டது, அருநதென முனனிலையேவலாக்கி உரையபினு மமையும்

குறிப்பு—செல்லலவிரண்டையும் எச்சமாக்கினும் பொருநதும் மாது ஓ இரண்டும் - அசைநிலை பரிசில், சன்மானம், பேறு எனபன - ஒருபொருட் சொறகள் நெஞசம் - விளி வாழக - விகாரம் 'தாளவாழக' எனறல மரபு, கOஈ - "புரததல வலலன வாழகவன ருளே", கஎக - "வாழவோர வாழவ வன ருளவா ழியவே" என இநநூலிலும், "நாதனருள வாழக" எனத திரு வாசகததிலும வநதிருததல காணக 'வாழகவவனருளே' எனவும பாடம

(கO௨) எருதே யிளைய நுகமுண ராவே
சகடம பணடம பெரிதுபெய தனறே
யவலிழியினு மிசையேறினு
மவண தறியுநா யாரென வுமணா
ரு கீழமரத தியாதத சேமவச சனன
விசைவிளஙகு கவிகை நெடியோய திஙக
ளணிறை மதியத தனையையிருள
யாவண தோநின னிழலவாழ வோரககே

திணை - அது, துறை - இயனமொழி
அவன்மகன் பொருடடெழினியை அவர் பாடியது.

இ - ள — இளைய எருது நுகம உணரா - இளைய எருதுகளானவை நுகமபூணுதலை மதியா, சகடம பண்டம பெரிது பெயதன்றே வணடியா னது உபபாகிய பணடம பெரிதாக இடபபட்டது, ஆதலால், அவல இழியி னும - அவவணடி பளளததே இறஙகினுலும, மிசை ஏறினும - மேட்டிலே ஏறினுலும, அவணது அறியுநா யாரென அவவிடததுவரும இடையூறறை அறிவார யார்தா னென்றுநினைதது, உமணர் கீழமரதது யாதத - உபபுவாணி கர் அசசுமரததின்கணணே அமைததுக கட்டப்பட்ட, சேம அச்ச அனன - சேமவச்சுபபோன்ற, இசை விளஙகு கவி கை நெடியோய - புகழவிளஙகிய இடக்கவிந்த கையையுடைய உயாநதோய! திஙகள நாள நிறை மதியத்து அனையை - நீ திஙகளாகிய நாளநிறைநத மதியததை யொபபை, ஆகலின, நின் நிழல வாழவோர்க்கு இருள யாவணது நினனிழறகண வாழுமவாக ளுக்குத துனபமாகிய இருள எவவிடததுளளது —எ - று

திஙகள்நாள்நிறைமதியத்தனையை யெனறது, அறிவும நிறைவும அருளு முதலாகிய குணங்களால அமைநதா யெனறவாறும சேமவச்சனனவென

றது, எறறிழிவுடையவழி அசசுமுறிநதுழிச சேமவசசு உதவினுறபோல நீகாக்கினறநாட்டிறகு ஒரிடையூறு உறறுல அதுநீககிக காததறகுரியையெனபதாம. 'எருதே யிளைய நுகமுண ராவே, சகடம பணடம பெரிதுபெய தனறே' எனபது உவமஙகருதாது சகடததிறகுவரும ஏதஙகுறிதது உழனை சேமவசசுயாததறகுக காரணமாயினறது

கு-பு பினபு உமணரெனறதனுல, பணடம உபபாயிறறு சேமவசசு காவலாகிய அசசு "தேமபாய கணணித தோவீசு கவிகை" (மலைபடுகடாம், ௩௯௯-ம அடி) எனபதில 'கவிகை' எனபதறகுப பொருள, 'கொடுததுககவிநதகை' எனறு செயயபபட்டிருககிறது அனன நெடியோயளைக இஙகே அறிவுமுதலியவறறுனிறைநத பொருட்டெழினி கூறபபட்டிருததல போலச சிந்தாமணி கோவிநதையாரிலமபகததில "வாளவாய" எனனும ௩௬-ம் கவியில, "நாளவாய நிறைநத நகைவெணமதி செலவ தொததன" எனச சீவகனும, சிறுபாணாற்றுபபடையில, "பனமீனுபபட பானமதி போல, வினனகை யாயமோ டிருநதோ ற குறுகி" என நலலியககோடனும கூறபபட்டிருததலகாணக அமைநதாய - நிறைநதோனே எறறிழிவு - எறுத விறஙகுதல ஏதம - துனபம மதிககுமுனபு இருளிலலாதவாறுபோல உனககுமுனனாத துனபம இலலாதெனறபடி (௧௦௨)

(௧௦௩) ஒருதலைப பதலை தூஙக வொருகலைத
தூமபகச சிறுமுழாத தூஙகத தூககிக
கவிழநத மணடை மலாககுநா யாரெனச
சுரனமுதல இருநத சிலவளை விறலி
செலலை யாயிற சேணு னலலன
முனைசுட வெழுநத மஙகுன மாபபுகை
மலைசூழ மஞசின மழகளி றணியும
பகைபபுலத தோனே பலவேல ஞ்சி
பொழுதிடைப படாஅப புலரா மணடை
மெழுகுமெல லடையிற கொழுநிணம பெருபப
*வலததற காலை யாயினும
புரததல வலலன வாழகவன றுளே

திணை அது, துறை விறலியாற்றுப்படை.
அதிகமான்நெடுமானஞ்சியை அவர் பாடியது.

இ-ள — ஒருதலை பதலை தூஙக - காவினது ஒருதலைககணணே பதலை தூஙக, ஒருதலை தூமபு அகம சிறுமுழா தூஙக தூககி - ஒருதலைககணணே துளையை அகததேயுடைய சிறியமுழாவைத தூஙகுமபரிசு தூககி, கவிழநத மணடை இடுவோரினமையின எலாதுகவிழநத எனமண

* வறததறகாலையெனறும பாடம

டையை, மலாககுள யாா என - இடமெலாததவலலாா யாரெனசசொலலி, சுரன முதல இருநத சிலவனை விறலி - சுாததிடததேயிருநத சிலவாகிய வளை யையுடைய விறலி! செலவையாயின - நீ அவனபாற போவாயாயின, சே ஞெள அலலன - அவன சேயமைககணணனலலன, முனை சுட எழுந்த மஙகுல மாபபுகை - முனைபபுலததைச சுடுதலாலெழுநத இருடசியையுடைய கரிய புகை, மலை சூழ மஞசின - மலையைசசூழுமுகிலபோல, மழ களிறு அணியும - இளஙகளிறறைசசூழும, பகைபபுலததோனே பல வேல அஞசி - பகைவாதேயததிருககான பலவேறபடையையுடைய அதிகமான, பொழுது இடைபபடா புலாா மணடை - ஒருபொழுதும ஓயாமல உணணவும தினன வுமபடுதலால ஈரமபுலராத மணடை, மெழுகு மெல அடையின கொழுநிணம பெருபப - மெழுகானியனற மெலலிய அடைபோலக கொழுததநிணம மிக, அலததல காலை ஆயினும - உலகம வறுமையுறுதலையுடைய காலமாயினும, புரததல வலலன - பாதுகாததலவலலன, அவன தாள வாழக அவனுடைய தாள வாழக — எ - று

பதலையெனபது, ஒருதலைமுகமுடையதோா தோறகருவி பகைப புலததோனெனறகருதது பகைவாபால திறைகொணடபொருளுடையனாத லின, நீவேணடியவெலலாநதருதல அவனுககு எளிதெனபதாம சேஞெ னலலனெனபதறகு - பரிசில நீடடிபபானலலனெனறு உரைபபினுமமையும உமமை - சிறபபு

கு - பு கா - தோடசுமை ஒருதலை - ஒருபககம தூஙக - தொஙக அகம - உள முழா - மததளம பரிசு - விதம மணடை - எறகுமபாததிரம மலாததல - வாயமேலாகபபிடிககசசெயதல விறலி விளிபபெயா, விறல படபபாடியாடுபவளெனபது பொருள சேயமை - தூரம முனைபபுலம - பகைவருறையுமிடம பகைமேறசெனறோா பகைவருடைய நாடடிலுளள ஊாகளைசசுடுதல மரபு, இதனை, இநநூலில "வடாது" எனனும சு - ம பாட டிலுளள "வாடுக விறைவநின கணணி யொனனா, நாடுசுடு கமழபுகை யெறிதத லானே" எனபதனாலும, "களிறு கடைஇய" எனனும எ - ம பாடடிலுளள "நாடுசுடு விளககத தழுவிளிக கமபலை" எனபதனாலும, "வினைமாடசிய" எனனும கசு - ம பாடடிலுளள "எம நனனு டொளளெரி யூடடினை" எனபதனாலும, "வெளிறி லேனகாழ" எனனும உ௩ ம பாட டிலுளள "நெடுஙகா, வினைபுனை நலலில வெவவெரி யினைபப" எனபத னாலும, "வலலா ராயினும" எனனும ருஎ - ம பாடடிலுளள "நனநதலைப பேரூ ரெரியு நகக" எனபதனாலும, மதுரைக்காஞ்சியிலுளள (கஉசு-கஉஎ-ம அடிகள) "காலெனனக கடிதுராய, நாடுகெட வெரிபரபபி" எனபதனாலு முணாக, இது, 'எரிபரநதெடுததல' எனனுநதுறையெனபா ஆசிரியா தொல்காபபியர், [தொல - பொரு - புறததிணையியல, அ - ம சூ] மணடை நிணமபெருபபப புரததல வலலனென இயைகக அடை - நிணததிறகுவமம விறலி புலாலுணபவளாதலின, இஙஙனம கூறினா இறைபபொருளை அரசா

இரவலர்க்கு அளித்தலை, "வேந்து தந்த பணிதிறையான், சேர்ந்தவர்க்கே பார்த்து, மோர்க்கு கொல்லியோர் ரடுபொருந" எனனும் இந்நூல் உட-ம செய்யுளாலுணர்க. உம்மை - 'ஆயினும்' என்பதிலுள்ளது. 'வாழ்க வவன் றுளே' எனவும் பாடம் (௧0௩)

(௧0௪) போற்றுமின் மறவீர் சாற்றுது நும்மை
ஊர்க்குறு மாக்க ளாட்டக் கலங்குந்
தாட்படு சின்னீர்க் களிறட்டு வீழ்க்கு
மீப்புடைக் கராஅத் தன்ன *வென்னை
௫ நுண்பல் கருமம் நினையா
திளையனென் றிகழிற் பெறலரி தாடே

திணை - வாகை, துறை - அரசவாகை.
அவனை அவர் பாடியது.

இ - ள் — போற்றுமின் மறவீர் - நீங்கள் பாதுகாமின் மறவீர், நும்மை சாற்றுதும் - நுமக்கு நாங்கள் அறிவிப்பேம், ஊர் குறுமாக்கள் ஆட - கலங்கும் தாள் படு சில நீர் - ஊரின்கணுள்ள இளம்புதல்வராடுதலாற் கலங்குகின்ற காலளவான அளவிற்பட்ட சில்வாகிய நீருள்ளே, களிறு அட்டு வீழ்க்கும் - யானையைக் கொன்று வீழ்க்கும், ஈர்ப்பு உடை கராஅத்து அன்ன என் ஐ - இழுத்தலையுடைய முதலையை ஒக்கும் என் இறைவனது, நுண் பல கருமம் நினையாது - நுண்ணிய பல காரியங்களையும் நினையாமலே, இளையன் என்று இகழின் - அவனை இளையனென்று மதியாதிருப்பின், ஆடு பெறல் அரிது - வென்றிபெறுதல் நுங்களுக்கு அரிது — எ - று.

மறவீர், நுமக்குச் சாற்றுதும், என்னை இளையனென்றிகழின் வென்றி பெறுதல் அரிது, ஆதலால், நீர் போற்றுமின் எனக் கூட்டுக.

மீப்புடையென்றோதி, மிகுதியையுடையவென்று செப்பினுமமையும்.

கு - பு மறவீர் வீரர்களே நும்மை, உருபுமயக்கம் கராம் - முதலை விசேடம், இதனை, "கொடுந்தாண் முதலையு மிடங்கருங் கராமும்" என்னுங் குறிஞ்சிப்பாட்டாலும், அதனுரையாலுமுணர்க. வீழ்க்குங்கராமெனக் கொள்க. என் ஐ - என்று தலைவன், "என்னைமுன் னில்லன்மின் றெவ்விர்" (எஎக) எனத் திருக்குறளில் வந்திருத்தல் காண்க. ஆடு வென்றி மறவர்களை நோக்கிக் கூறியதுபோலத் தலைவனது வென்றி கூறியவாறு (௧0௪)

(௧0௫) சேயிழை பெறுகுவை வாணுதல் விறலி
தடவுவாய்க் கலித்த மாயிதழ்க் குவளை
வண்டுபடு புதுமலர்த் தண்சிதர் கலாவப்
பெயினும் பெய்யா தாயினு மருவி
௫ கொள்ளுழு வியன்புலத் துழைகா லாக

* என்னையென்றும் பாடம்.

மால்புடை நெடுவரைக் கோடுதோ றிழிதரு
நீரினு மினிய சாயற்
*பாரி வேள்பாற் பாடினை செலினே

திணை - பாடாண்டிணை, துறை - விறலியாற்றுப்படை
வேள்பாரியைக் கபிலர் பாடியது

இ - ள் — வாள் நுதல் விறலி - ஒளிதங்கிய நெற்றியையுடைய விறலி, சேயிழை பெறுகுவை - சிவந்த ஆபரணங்களைப் பெறுவாய், தடவுவாய்க் கலித்த மா இதழ்க் குவளை - பெரிய இடத்தையுடைய சுனையின்கண் தழைத்த கரிய இதழையுடைய நீலத்தினது, வண்டு படு புதுமலர் - வண்டு மொய்க்கும் புதிய மலரின்கண், தண் சிதர் கலாவ - குளிர்ந்த துளி கலக்க, பெயினும் பெய்யாதாயினும் - மழைபெய்யினும் பெய்யாதொழியினும், அருவி —, கொள் உழு வியன் புலத்து உழை காலாக - கொள்ளிற்கு உழுத பரந்த நிலத்திடை நீரோடுகாலாக ஓட, மால்பு உடை நெடுவரைக் கோடுதோறு இழிதரும் - கண்ணேணியையுடைய நெடிய மலையினது சிகரந்தோறும் இழிதரும், நீரினும் இனிய சாயல் - நீரினும் மிக இனிய மென்மையையுடைய, பாரி வேள்பால் பாடினை செலினே - வேள்பாரிபக்கலே நீ பாடிச்செல்வாயாயின் — எ - று.

விறலி, பாரிவேள்பாற் பாடினை செலின், சேயிழைபெறுகுவையெனக் கூட்டுக.

அவன்மலையாதலால், எக்காலமும் அருவி கோடுதோறிழிதருமெனப்பட்டது. புதுமலர்த் தண்சிதர் கலாவப் பெயினும் பெய்யாதாயினும் உழை காலாகக் கோடுதோறிழிதரும் அருவிநீரினும் இனியவென வியையும்.

எனவே அவன்குணங்கள் தோன்றின்றன.

கு - பு தடவுவாய் - அன்மொழித்தொகை. மா - கருமை. கலாவ காரியப்பொருட்டு. உழை - இடம். கண்ணேணியாவது - கணுக்களிலேயே அடிவைத்து ஏறிச்செல்லும்படி அமைந்துள்ள மூங்கில். பாரியின் மலையாகிய பறம்பி லுள்ள அருவியையும், அதிலுள்ள சுனையையும் நல்லிசைப்புலவர் பலரும் பாராட்டியுள்ளார், "பாரி பறம்பிற் பனிச்சுனை போலக், காண்டற் கரியள்" என்பது இந்நூல், ௱௰எ, "பிறங்குவெள் ளருவி வீழுஞ் சாரற், பறம்பிற் கோமான் பாரி" என்பது சிறுபாணாற்றுப்படை, ௯௦ - ௯௧, "பாரிபறம்பிற் பனிச்சுனைத் தெண்ணீர்" என்பது குறுந்தொகை, ௧௯௬, "பாரியம் பெருமலைஞ்சுனை பூத்த, தேங்கமழ் புதுமலர்" என்பது அகநானூறு, எஅ. தோன்றின்ற அவன்குணங்களாவன தண்மை, வறப்பினும் வளந்தரும் வண்மைமுதலியன. (௧௦௫)

---

* பாரியின் பெருமையை "கொடுக்கிலாதானைப் பாரியே யென்று கூறினுங் கொடுப்பாரிலை" என்ற ஸ்ரீசுந்தரமூர்த்திநாயனார் திருவாக்காலு முணர்க, திருப்புகலூர்த்தேவாரம்.

(௧0௬) நல்லவுந் தீயவு மல்ல குவியிணர்ப்
புல்லிலை யெருக்க மாயினு முடையவை
கடவுள் *பேணே மென்னா வாங்கு
மடவர் மெல்லியர் செல்லினுங்
கடவன் பாரி கைவண் மையே.



திணை - அது; துறை - இயன்மொழி.
அவனை அவர் பாடியது.

இ-ள் — நல்லவும் தீயவும் அல்ல - நல்லனவென்றும் தீயனவென்றும் சொல்லப்படுவன சூடும்பூவாதலால் அவையிரண்டினும் வைத்து எண்ணப்படாத, குவி இணர் புல் இலை எருக்கம் ஆயினும் - குவிந்த பூங்கொத்தினையும் புல்லிய இலையையுமுடைய எருக்கம்பூவாயினும், உடையவை கடவுள் பேணேம் என்னா - ஒருவனுடையவற்றைத் தெய்வங்கள் விரும்பேமென்னா, ஆங்கு - அதுபோல, மடவர் மெல்லியர் செல்லினும் - யாதும் அறிவில்லாதாரும் புல்லிய குணங்களையுடையாரும் செல்லினும், பாரி கைவண்மை கடவன் - பாரி கைவண்மைசெய்தலைக் கடப்பாடாகவுடையவன் — எ-று.

'குவியிணர்ப் புல்லிலை யெருக்கம்' என்றது, முதற்கேற்ற அடையடுத்த ஆகுபெயர். உம்மை இழிவுசிறப்பு. மெல்லியரென்பதற்கு வறுமையுற்றாரென்று முரைப்பர்.

கு-பு. நல்லவுந்தீயவுமென்றது சூடுதற்குரிய பூக்களை யென்றும், சூடாப்பூவாகியஎருக்குத் தீயனவற்றினவரிசையில்வைத்தும் எண்ணப்படாதென்றுங் கொள்க; எருக்கம்பூவின் இழிவைக்கூறியபடி. இங்ஙனமிழிந்த எருக்கம்பூவையும் கடவுள் பேணுதலை, "துன்னியவூ ரினும்விரைசார்ந் தறியாத புல்லெருக்குஞ் சூடிக் கொண்டாய்" என்னும் இரத்தினகிரிக்கலம்பகச் செய்யுள்முதலியவற்றா லுணர்க. ௩. யாதும் - சிறிதும். மடம் - அறியாமை. கடப்பாடு - கடமை. எருக்கமென்றது பூவுக்கானமையின், ஆகுபெயரென்றார். 'முதற்கேற்றஅடையடுத்தது' என்றதை "கருந்தட் டுளைப்பூ மருதி னொள்ளிணர்" என்னுந் திருமுருகாற்றுப்படையிலுங் காண்க. உஅ-ம் அடி உம்மை, 'செல்லினும்' என்பதி லுள்ளது. (௧0௬)

(௧0௭) †பாரி பாரி யென்றுபல வேத்தி
யொருவற் புகழ்வர் செந்நாப் புலவர்
பாரி யொருவனு மல்லன்
மாரியு முண்டீண் டுலகுபுரப் பதுவே.

---

* வேண்டேமென்னாவென்றும் பாடம்.

† இப்பாட்டு, தொல். பொருள். புறத்திணையியலில், ௩௫-ம் சூத்திரத்தில் "கொடுப்போ ரேத்திக் கொடாஅர்ப் பழித்தல்" என்பதனுரையிற் கொடுப்போரை ஏத்தியதற்கும், உவமவியலில், "உவமத்தன்மையும்" என்னும் ௩௪-ம் சூத்திரவுரையிற் பட்டாங்குவமத்திற்கும் உதாரணமாக வந்துள்ளது.

